உ

# ரத்னாவளி

ஒரு தமிழ் நாடகம்

ராவ்பஹதூர்

## ப. சம்பந்த முதலியார், பி.ஏ., பி.எல்.,

அவர்களால் இயற்றப்பட்டது.

இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ் நூல்கள்:—

லீலாவதி-சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி சுலோசனா, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல்பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், வள்ளிமணம், பேயல்லபெண் மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன்ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அசிஸ்டெண்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்ரமோர்வசி, முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள் முதற்பாகம், நாடகமேடை நினைவுகள் இரண்டாம் பாகம், நாடகத் தமிழ், யயாதி, பிராம்மணனும்-சூத்திரனும், வாணீபுர வணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், கண்டு பிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையிற் கூட்டம், குறமகள், வைகுண்ட வைத்தியர், முதலியன.

நான்காம் பதிப்பு

சென்னை 'டியர்லெஸ்' அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பட்டது

1935



[விலை ரு. 1-0-0

INSCRIBED

to

THE BELOVED MEMORY

of

MY PARENTS

**P. VIJIARANGA MUDALIAR**

and

**P. MANICKAVELU AMMAL**

and

MY FRIEND

**C. RANGAVADIVELU**

# PREFACE

I have taken the skeleton of the plot of this drama from its Sanskrit Original. I have made considerable changes in the story, adding several new characters and also several new scenes.

I have slightly abridged the prose in this edition in order that the drama might be acted in three and a half hours at the most.

I should like to draw the attention of all persons concerned that under the latest Copy-right Act any breach of copyright is made a criminal offence also So I would like to inform all societies both Professional and Amateur, that they would do well to take my permission before they stage this or any other drama of mine. The author's copyright includes, not merely staging same, but also translating it into other languages.

"PAMMAL LODGE"
G T MADRAS
2nd April 1935

THE AUTHOR,

# ரத்னாவளி



## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| வத்சராஜன் | ... ... | கௌசாம்பி நகர மன்னன் |
| யௌகந்தராயணன் | ... | வத்சராஜன் அமைச்சன் |
| வசந்தகன் | ... ... | வத்சராஜன் உயிர்த்தோழன் |
| பாப்ரவ்யன் | ... ... | விகடன் |
| டாமரவ்யன் | ... ... | பாப்ரவ்யன் இளைய சோதரன் |
| வசுபூதி | ... .. | சிம்ஹள மன்னன் அமைச்சன் |
| விஜயவர்மன் | ... ... | கௌசாம்பி சேனைத் தலைவன் |
| சமரசித்தி | ... . | ஒரு மாந்திரீகன் |
| வாசவதத்தை | ... .. | வத்சராஜன் மனைவி |
| ரத்னாவளி (சாகரிகை) | ... | சிம்ஹள மன்னன் புதல்வி |
| காஞ்சனமாலை | ... .. | வாசவதத்தையின் உயிர்த்தோழி |
| சுசங்கதை | ... ... | சாகரிகையின் உயிர்த்தோழி |

கடல் வலைஞர், படைவீரர், அரண்மனைப் பாடகர்கள்,
சேவகர்கள், தோழியர் முதலானோர்



**கதை நிகழ் இடம் :**—கௌசாம்பி நகர.

# ரத்னாவளி

## முதல் அங்கம்

### முதற் காட்சி.

இடம்—கடற்கரை. காலம்—காலை.

ஒரு புறம வலைஞர் ஒரு பெரிய வலையை வலிததுககொணடிருக்கின்றனர்.

முு-வ. அலலாம துககு துக்கா அறநது பூட்டுதுடா, இநத எய் வெடுதத வானம் நணறு அடிசசாலும அடிசசுது!

இ-வ. ஆமாம, அநதே பெரிய கபபலே சுககலு சுககலாப பூடடு தாம்! இந்த கவுறு நிககிதா?

மு-வ எநத வுசுருறலும தபபிசசிகினு இாககுமா அதுலே?

இ-வ. டே யபபா! எலலாம் முயகிதாபோயிருககும்—மலெயெப போலெ மோதிசசே ஒவவொரு அலே!

மு-வ. ஏண்டா, அது நமப ஊரு கபபலுதானே அது?

இ-வ. பாத்தாககா அபபடிததான இந்துது—நிசசமா என்னமா சொலரது?

மு-வ. டே யபபா! பெருசசா என்னமோ வருதுடா! மீனு! வாஙகடா! வாஙகடா!—இசுங்கடா! இசுஙகோ!

மு-இ-வ. எதோ! எதோ! [அவாகளிடம போய்] ஆமாணடா! ஆமாணடா! இசுங்கோ! இசுங்கோ!

[எல்லோருமாகச சோந்து வலையைப் பாடிக் கொணடே இழுக்கின்றனர். வலையின் மததியில் ரதனாவளியின் உடல் வருகிறது.]

எல்லோரும். [அதைக் கணடு பயந்தவராய்] டே...டேடே.. பு...பு... பொணம!...பொணம்!...

**பாப்ரவ்யன் ஒரு பெரிய புஸ்தகத்தைப் படித்தவண்ணம் வருகிறான்.**

**பா.** "தெற்கு மூலை, கொடிக் கம்பத்திற் கெதிரில்"—தெற்கு மூலை—கொடிக் கம்பம்— எதிர்.—அடே! எங்கே எங்க வாத்தியார்?

**வலைஞர்.** நாங்கல்ல! நாங்கல்ல!— [ஓடிப்போகின்றனர்.]

**பா.** ஆ! அதோ வருகிறார் வாத்தியார் ராஜாவுடன்! என்னைப் பார்த்தால் அப்படியே திருப்பிப் போய்விடுவார். இங்கே ஒளித்துக்கொண்டிருந்து மெல்ல அவர் பேசுவதையெல்லாம் கற்றுக்கொள்ளவேண்டும். எங்கே ஒளித்துக்கொள்ளுகிறது? வேறே ஒன்றையும் காணேனே!—
[வலைகளின் மத்தியில் ஒளிந்து கொள்ளுகிறான்.]

**வத்சராஜனும், வசந்தகனும் வருகிறார்கள்.**

**வ.** தோழா, எதன்பொருட்டு என்னை இவ்விடம் அழைத்தனை? விசேஷம் உண்டேல் விளம்புவாய் விரைவினில்.

**வச.** ஏன்? அவசரமோ? வாசவதத்தையைப் பார்த்து அநேக யுகங்களாயிற்றோ! சீக்கிரம் போய்ப் பார்க்கவேண்டும் போலிருக்கிறது—போம், போம்!—

**வ.** தோழா, கோபியாதே என்மேல் கோதை முனிந்து நிற்பாள் என்று கூறலானேன், காரியமென்ன கடிதிற் கூறு.

**வச.** காரியமொன்றுமில்லை. எந்நேரமும் அரண்மனை அந்தப்புரத்தில் அடைபட்டிருக்கிறீரே, கடலோரம் வந்து இவ்வழகிய காட்சியைக் கண்டு கண் குளிரலாகாதா சற்று என்று அழைத்தேன்.

**வ.** பாவையிடத் தென்றுளது பார்ப்பதற்கு?

**வச.** பாவையிடத்தில் மாத்திரம் என்ன இருக்கிறது பார்ப்பதற்கு?

**வ.** நண்பனே, அறியா தொன்றும் அறைகிறாய் நீ. இவ் வார் கலியைக் கேட்டலினால் அணங்கின் பாதத் தார் கலியினைக் கேட்டலினு லுண்டாம் இன்பம் உண்டாமோ வெனக்கு? இத் திரையானது அவள் பக்கலினித் திரைக் கொப்பாமோ?

இவள் வாழியி னழகு அவட் சிறு விர லாழிமு னென்னும்? மைப்படியும் இவள் வேலை மைப்பொதியும் அவள் வேலை நிகர்க்குமோ?

வச. சரி! போதும்! போதும்! யௌகந்தராயணர் சொன்னது உண்மைதான்.

வ. என்ன சொன்னான் யௌகந்தராயணன்?

வச. வேறொன்று மில்லை! இவ்வரசை நீர் ஆளுகிறீர், உம்மை தேவி ஆளுகிறாள் என்று கூறினார்.

வ. ஆஹா! உண்மையைக் கூறினான், தவறென்ன அதில்?

வச. தவறென்ன இருக்கிறது அதில்! அதிருக்கட்டும்.—நான் வந்த காரியத்தைச் சீக்கிரம் முடித்துக்கொள்ளுகிறேன்.—அரசே, எனக்கு விடை யளிக்கவேண்டும். இங்கிருப்பது எனக் கிஷ்டமில்லை, நான் தேச சஞ்சாரம் செய்யப் போகிறேன்.

வ. தோழா, என்ன இப்படிக் கூறுகிறாய்? என்ன உனக் கென் மீது வெறுப்பு?

வச. அதைத்தான் கேட்க வந்தேன், என்ன உமக் கென்மீது விருப்பு?

வ. தோழா, என்னை விட்டுப் பிரிய உனக்கு மனம் வருமோ?

வச. ஆமாம்! என்னை விட்டு நீர் பிரியாதிருக்கிறீரே! என்னைப் பார்த்து சாவகாசமாய்ப் பேசி எத்தனை நாட்க ளாயது, மாதங்க ளாயது, வருடங்க ளாயது? வாசவதத்தை வந்தது முதல் வசந்தகனை பாடு திண்டாட்டந்தான்! நண்பனே! நண்பனே! இப்படியு மாவீரா நீர்? வாசவதத்தையி னுடைய வாசற்படித்தை யானீரே! ஐ ஐயோ!—

வ. வசந்தகா, இதனபொருட்டா உனக் கென்மீது கோபம்? இது நியாய மன்றுனக்கு; நீ பிரம்மசாரி, உனக்கு மொரு விவாக மானாலன்றோ தெரியு மென் னிலைமை!

வச. அது போனாற்போகிறது—நானாவது தனிமையாக சும்மா விருக்கலா மென்றாலோ, தேவியி னுத்தரவு தட்ட லாகா

தென்று அந்தப் பெரும் மூடன் பப்பரவாயனை என் தலையில் கட்டிவிட்டீர் !

வ. அவன் என்ன செய்கிறானென்னை ?

வச. ஐஐயோ ! அதை யேன் கேட்கிறீர் ? ஒரு க்ஷணமும் என்னை விடேனென்கிறான். எந் நேரமும என் பக்கத்திலேயே நின்றுகொண்டு நான் சொலவதை யெல்லாம் ஒரு பெரிய புஸ்தகத்தில் எழுதிக்கொண் டிருக்கிறான் ! நான் சொல்வது செய்வது எலலாம் கறறுக்கொளள வேண்டுமாம். நேற்றிரவு நான் தூங்கிக்கொண் டிருக்கும் பொழுது என்னை எழுபபினான ; என்னடா என்று திடுக்கிட் டெழுந்தேன் ! ‘ ஒன்று மிலலை, ஒரு நாழியாக நீங்கள் குறட்டை விடுவதைக் கேட்டுக்கொண் டிருந்தேன், இன்ன ராகத்தில் குறட்டை விடுகிறீர்களென்று புலபபடவில்லை. அதைத் தயவுசெய்து சொல்லவேண்டும் புஸ்தகத்தில் எழுதிக்கொள்ள ’ என்று கேட்டான் ! பெரிய இழவா யிருக்கிறது '—

பா. [வலையின் கீழிருந்து] பே ரிழவா யிருக்கிறது.

வச. [திடுக்கிட்டு] அடடா ! யாரது ?—ஒருவரையும் காணோமே ! யார் பேசியது ?

வ. என்ன வசந்தகா, என்ன திடுக்கிட்டாய் ?

வச. ஒன்று மில்லை ; இந்தப பபபரவாயர் குரலைக் கேட்டது போ லிருந்தது.

வ. என்ன சித்தப்பிரமை ! நம்மை யன்றி இங் கொருவரு மில்லையே !

வச. சரிதான், இந்தச் சனி இங்கேயும் நம்மை விடாது எங்கு வந்ததோ என்று பார்த்தேன், அதனிடமிருந்து தப்பித்துக் கொண்டு வருதல் அவவளவு கஷ்டத்திலிருககிறது.

வ. அது ஏன் உனக்கு அவ னென்று லாகவிலலை ?

வச. எப்படி ஆகிறது ? முதலில் பெயரைப் பாருங்கள்—பப்பர வாயன் !

பா. [வலையின் கீழிருந்து] பாப்ரவ்யன்.

வச. அடடே! அரசே! இப்பொழுது கேட்கவில்லையா நீர் குரலை? இங்கேதான் எங்கேயோ ஒளிந்துக்கொண்டு இருக்கிறாற்போல தெரிகிறது! தேடிப பார்ப்போம்.

வ. வசந்தகா, சித்தப்பிரமை! உன் மனத்தில் எந்நேரமும் அவனைப்பற்றியே நினைத்துக்கொண டிருக்கிறாற்போலிருக்கிறது! அல்லது இத் திரை கடலொலியோ?

வச. இந்த அலை கோஷ்டததிலாவது கொஞ்சம் அர்த்தமிருக்கிறது. அவவள விருந்தால போதாதா? அதிருக்கட்டும் —இங்கேதான் இருக்கவேண்டும், நான் கா தாரக் கேட்டேனே! எங்கேயோ ஒளிததுக்கொண்டிருக்கிறது, இந்தச் சனி. [தேடுகிறான்.]

பா. [வலையின் கீழிருந்து] இந்த—சனி—இந்தச சனி.

வச. [திடுக்கிட்டு] ஓகோ! இந்த வலை முட்டைக்குள் இருக்கிறாயா ஆசாமி!

வ. பாப்ரவ்யா! இதென்ன விந்தை!

பா. [வெளி வந்து] மகாராஜா, மன்னிக்கவேண்டும் —வாத்தியாரே, கடைசியில் என்ன சொன்னீர்? நன்றாய்க் கேட்கவில்லை—

வச. இந்தப் புஸ்தகத்தைச் சமுத்திரத்தில போடவேண்டும் என்று சொன்னேன்.

பா. [எழுதிக்கொண்டே] இந்தப் புஸ்தகத்தை—

வச. சமுத்திரத்தில் போடவேண்டும்!

[அதைப் பிடுங்கிச சமுத்திரத்தில் போடப் பார்க்கிறான்.]

பா. ஐ ஐயோ! வேண்டாம்! வேண்டாம்!—

வ. பொறு! பொறு! வசந்தகா! பேதை யவன்! பாபம் கொடுத்துவிடு.

வச. ஆனால் என் னெதிரில் இதில ஒன்றும் எழுதுவதில்லை என்று பிரமாணம் செய்து தருகிறேன்.

பா. அப்படியே !

வச. ஜாக்கிரதை ! மறுபடியும் எழுதும்பொழுது பார்த்தேனே, கிழித் தெறிவேன்

பா. உத்தரவுபடி—ஆனல் ஒரு மனு, சற்றுமுன்பாக சொன்னீரே, இந்த சனி—இந்தச சனி, அதற்கு சூத்திரமென்ன?

வச. தடபபம—கட்டை, தடபபக்கட்டை என்று வருகிறதே அதே சூத்திரம், தெரிகிறதா ?—ஆஹா ! கெட்டது குடி ! அதோ தேவி வருகிருர்கள்போ லிருககிறது சேடியருடன் உம்மைத் தேடி ! அரசே ! வாரும், வாரும. இங்கு வருமுன் காணுததுபோல போயவிடுவோம் !

வ. தோழா, அது நியாய மன்று பிறகு வாசவதத்தைக்கு மிகவும கோபம வரும்.

வச. வந்தாலும் வரட்டும். நான் இவவளவு கஷடபபட்டு உம்மை இங்கு அழைத்து வருவ தென்ன, நீர மறுபடியும் தேவி யிடம் போய்விடுவ தென்ன ? வாரும், வாரும, முககியமான விஷய மொன்று சொலலவேண்டும்.

**சண்பகமாலை, மதனிகை, நிபுணிகை, சுசங்கதை வருகிருர்கள்.**

நால்வரும். ஜெயவிஜயீபவ ! மஹாராஜா ! தேவியவாகள் உமமை விரைவில அழைத்துவரச சொன்ஞாகள.

வச. நான் அபபொழுதே சொன்னேனே, கேட்டீரா ? இப்பொழுதும் ஒன்றும கெடடுப போகவிலலை. நீங்கள் போய் தேவியுடன, வசந்தகன இனனும் விரைவில் அழைத்துக்கொண்டு போய்விட்டான், என்று சொலலி விடுங்கள்

வ. வசந்தகா, நான் சொலவதைக் கேள்—

வச. கேட்கிறேன் வாரும் !

[அரசனைப் பலாத்காரமாய் எதிர்ப்புறம் அழைததுச செல்ல அஙகு வாசவதத்தையைக் காண்கிருன்.]

வா. வசந்தகா !

வ. பிராணநாயகி, அவனை வெறுக்கவேண்டாம். அவன் மீதொரு குற்றமு மில்லை. வேண்டுமென்ருல என்னைத்

தண்டிப்பாய். என்னுயிரே! உன் அழகிய பாதம் செந்தாமரையெனச் சிவக்க இத்தனைத் தூரம் நீ என் பொருட்டு நடந்து வருவானேன்? என்னிடம் ஒரு வார்த்தை சொல்லியனுப்பின் நான் விரைந்தோடி வந்திருக்கமாட்டேனோ?

வச. கேட்பானேன்?

வா. ஆம், சற்று முன்பாக, விரைந்தோடிப்போகப் பார்த்தீரே! இதுதானோ தாம் க்ஷணப்பொழுதில் வருகிறேன் என்று போனது? என்னுடனிருப்பதெனறாலதான் உமக்கு ஒரு க்ஷணம் ஒரு யுகமாயிருக்கிறதுபோலிருக்கிறது. மற்றொருடனும் பேசும்பொழுதும ஒரு யுகமும் க்ஷணமாகிறதுபோலிருக்கிறது!

வச. ஐயோ பாவம!

வ. கணமணி! என்ன இப்படிக் கூறுகிறாய்? உன்னைவிட்டு அரை க்ஷணமும் பிரிந்திருக்க எனக்கு மனம் வருமோ?

வச. உம! உம!

வா. ஆமாம்! அரை க்ஷணம் பிரிந்திருக்க மனம் வராது. அரை நாழிகை பிரிந்திருக்க மனம வரும. அதிருக்கட்டும்.— இங்கு வந்தென்ன செய்துகொண்டிருந்தீர்?

வச. அப்படிக் கேளுங்கள!

வ. கண்ணே! என்மீது கோபியாதே! வசந்தகனும நானுமாக இங்கு உலாவ வந்தோம். வசந்தகன் கடலிலனழகை வாணிக்கத் தொடங்கினான். அதினிலும் உன்னெழிலே மேம்பட்டதென ஸ்தாபித்தேன.

வா. அவவளவாவது செய்தீரே!

வச. இன்னும் என்ன செய்யவேண்டுமோ?

வ. கண்ணே! இன்னும கோபமா?

வா. எனக்கென்ன கோபம் பிராணநாதா?—ஏன் வசந்தகா! மஹாராஜாவை அழைத்துக்கொண்டு போகிறது தானே? சற்று முன்பாக இழுத்துக்கொண்டு போகப் பார்த்தனையே!

வச. நானில்லை அம்மா! உங்கள் கண் பல மெங்கே? என் கை பல மெங்கே? சரி! தீர்ந்தது! கொண்டவரும் கொடுத்த வரும் ஒன்று—

பா. [அவன் பின் பக்க மிருந்து] நடுவில் நின்றவன் வாயில் பிடி மண்ணு.

வச. [திரும்பிப் பார்த்து அப் புஸ்தகத்தைப் பிடுங்கி] நான் அப்பொழு தே சொன்னேனே, என்முன் எழுத வேண்டாமென்று!

பா. அதற்காகத்தான் உமக்குப் பின்னுக எழுதினேன்.

வா. வசந்தகா, அவன்மீது கோபித்துக்கொள்ளாதே, கொடுத்து விடு.

வ. உன் உத்தரவுபடிதானே செய்தான், கொடுத்துவிடு.

வச சரி! ஒரு வாாசுககு இரண்டு வாாசா?—நீயும உன் புஸ்தக மும் எங்கே போகபபோகிறீர்கள், பார்பபோம்.

வா. வசந்தகா, உனக் கின்னும் இந்தக குணம் போகவில்லையே?

வ. உடன் பிறந்தது உடலுடன்தான'

வச. இலலை இல்லை, 'தங்களுககுத் தேவியார் வாயததது போல எனக்கும ஒரு மனைவி வாய்த்தால உடனே போய்விடும பயந்தோடி.

கா. [நகைத்துக்கொணடே] ஏன! என்னை விவாகஞ் செய்து கொள்ளுகிறதுதானே வேண்டுமென்றால்!

வச. அம்மா' அமமா! வேண்டாம். உனக் கொரு கோடி நமஸ் காரம்! தீர்ந்தது பிறகு, மழுங்கத் தீர்ந்தவன் தான்!

கா. ஆனல சுசங்கதையைத்தான் மணஞ் செய்துகொள்ளப போகிறீரோ?

வச. அதுதான் யோசனை செய்துகொண் டிருக்கிறேன்.—ஏ! சுசங்கதை!—

சு. காஞ்சனு! உனக்கும வேலை யிலலை, இநதப் பிராமணருக் கும் வேலை யிலலை!

ஒரு சேவகன் வருகிறான்.

சே. ராஜாதிராஜனே! பராக்! காலையில் கரை யோரம் உடைந்த மரக்கலம் சிங்களத் தீபத்தியதென்றும், அத்தேசத்து ராய பாரி பிரக்ஞை யற்றவராய் கரையில் ஒதுக்கப்பட்டா ரென்றும், சற்று முன்பாக யௌகந்தராயணர் சமுகத்திற் குச் சேதி அனுப்பினார்.

வ. அப்படியா? நம்முடைய விஜயவர்மன் எப்படி யானான்? ஐயோ! நான் அப்பொழுதே சந்தேகித்தேன்—வாசவ தத்தை, நான் போய் விசாரித்து வருகிறேன், இங்கே தான் சற்றிரு.

வா. போய்ச சீக்கிரம் வாரும், அங்குதானே இருந்துவிடாதீர்.

வச. நானும் வருகிறேன.

வா. வேண்டாம், நில் அப்படியே, மஹாராஜாவை எங்கேயாவது அழைத்துக்கொண்டு போய்விடுவாய் நீ.

வச. ஐயோ! என்ன பய மம்மா, அரை நாழிகையும் விட்டுப் பிரிந்திருக்கமாட்டீரோ உமது பிராணநாதரை? அவர் வேறொரு ராஜகுமாரியை மணமபுரிந்தால ஒரு வேளை, அப்பொழுதென்ன செய்வீரோ நீர?

[தோழிகள் சுற்றிப் பார்த்துவரும் பொழுது ரத்னாவளி யின் உடலைக் காண்கின்றனா.]

தோழியர். அம்மா! அம்மா! இதென்ன விந்தை!

வா. [அருகிற் சென்று] ஆ! ஏன்ன?

வச. என்ன! என்ன!—

சு. இதோ பாரும்! யாரோ ஒரு பெண்ணினுடைய உடல் இருக்கிற திங்கே வலையில்!

வச. ஆஹா! என்ன ரூபவதி!

கா. இறந்துகிடக்கிறாள போல் லிருக்கிறதே! ஒரு வேளை மரக் கலம உடைந்தபொழுது ஒதுக்கப்பட்டவளோ?

சு. இல்லை! இல்லை! இறக்க விலலை! இதோ சுவாசம் மெல்ல வருகிறதே! மூர்ச்சையா யிருக்கிறாள்.

வா. ஆம், ஆம்! ஐயோ பாவம்! உடனே ஏதாவது சிகிச்சை செய்வோம்.

வச. நான் மஹாராஜாவுக்குப் போய்த் தெரிவிக்கிறேன்.—என்ன அழகி! என்ன அழகி! [விரைந்து போகிறான்.]

வா. அடடா! எங்கே ஓடுகிறான் வசந்தகன்?—பாப்ரவ்யா! ஓடி அவனை அழைத்துவா.

டா. இருங்க ளம்மணி கொஞ்சம். இதோ எழுதிவிட்டு வருகி றேன.—என்ன அழகி! என்ன அழகி!

வா. வசந்தகனு கூறினான்? ஓஹோ! மஹாராஜாவிடம் போய் ஏதாவது உளறிவிடுவான்.—சுசங்கதா, நீங்கள் அபபடியே இப் பெண்ணை விரைவில அரண்மனைக் கெடுத்துச் செல் லுங்கள். எடுத்துச சென்று தக்க ஔஷதங்கள் கொடுத்து மூர்சசை தெளிவியுங்கள். ஜாக்கிரதை, ஒருவருக்கும் ஒன் றும் வெளியிடாதீகள், புறபபடுங்கள்.

[இரணடு தோழிகள் ரத்னாவளியை எடுத்துச செல்கின்றனர்.]

கா. நல்ல வேலை செய்தீர், அம்மணி. இலலாவிடின் இந்தப் பிராம்மணன் ஏதாவது சூழ்சசி செய்வான். இப்போழுகி மஹாராஜாவின் கண்முன் படா திருத்தலே நலம

வா. இப்பொழுதழைத்துக் கொண்டு வரட்டும் மஹாராஜாவை —விரைந்து ஓடினானே!—ஒரு வேடிக்கை செய்யலாம்.— பாபரவயா, இபபடி வா. சொன்னபடி கேள்; இப்படிப் படுத்துக்கொள், வாயைத திறக்காதே!

[அப்படியே செய்கிறான்.]

பா. புஸ்தகம், அமமணி!

வா. இதென்னத்திற்கு?—போகிறது கொடு. மஹாராஜா வந்து பார்க்கும்பொழுது மூர்சசையா யிருப்பதுபோல் அப்படியே யிரு—காஞ்சனா, இந்தத துணியை எடுத்துப போர்த்து விடு.

வத்சராஜனும், வசந்தகனும் விரைந்து வருகிறார்கள்.

வச. தேவலோகததுப் பெண்தான்! என்ன அழகி! என்ன அழகி!

வ. எங்கே? எங்கே?

வா. யார்?

வச. விளையாடாதீர்கள்! சற்று முன்பாகக் கரையோரம் மூர்ச்சையாய்க் கிடந்த அணங்கை நிகா மின்னாள்.—

பா. [வலையின் கீழிருந்து] மின்னாள்!

வச. ஆ! அதோ! அதோ! ஒளித்து வைத்தீர்களா என்ன?
[வலையைத் தள்ளிப் பார்க்க பாப்ரவ்யனைக் காண்கிறான். எல்லோரும் நகைக்கின்றனர்.]

வா ஐ ஐயோ! இப்படியும் ஏமாறுவார்களா? இதோ அரசே! யாரைப் பார்க்க அப்படி ஓடிவந்தீர்கள்? இந்த அழகியை! இந்த தேவலோகத்துப் பெண்ணையா? இந்த அணங்கை நிகா மின்னாளையா? [நகைக்கிறாள்.]

பா. வாத்தியாரே, அந்தப் பத மென்ன, மின்னலா, மின்னாளா?

வச. சொல்கிறேன்!
[புத்தகத்தைப் பிடுங்கிக்கொண்டு ஓட, பாப்ரவ்யன் பின் தொடர்கிறான்.]

வா. பிராணநாதா, இப்படியும் ஏமாந்து போவீரா? யாரைப் பார்க்க அவ்வளவு விரைந்தோடி வந்தீர்? ஏன் தலையைத் திருப்பிக் கொள்கிறீர்? இப்படிப் பாரும், வெட்கமாய் இருக்கிறதோ?

வ. உம்! இதெல்லாம் உன் விளையாட்டென்றெனக்கு தெரியும்.

வா. ஆமாம், நிரம்பத்தான்! கேட்பானேன்? ஏமாந்தது வாஸ்தவம்தான். சரி, போனாற் போகிறது. இனியாவது இப்படி ஏமாறாதீர்! இருட்டி விட்டது, போவோம் அரண்மனைக்கு, வாரும். [எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி.

**இடம்—அரண்மனையில் ஓர் அறை காலம்—காலை.**

**யௌகந்தராயணன் வருகிறான்.**

**யௌ.** [*தனக்குத்தானே*] தேடரிய முயற்சி யிருந்தும் தெய்வானுகூலம் வேண்டு மெதற்கும்! வத்சராஜன் பொருட்டு நான் வருந்திச் செய்த முயற்சி யெல்லாம் வியர்த்த மாயினவே! எண்ணிய கருமம் முடிப்பதற்கு இழியா மசத்தியத்திற்கு முடன்பட்டேன்! வாசவதத்தை உள்ளளவும் ரத்னாவளியை இலங்கை மன்னன் கொடுக்க இசையானென அறிந்து "அனலிற் பட்டு இறந்தாள் அணங்கு" எனப் பொய்ச் செய்தி கற்பித்து, விஜயவர்மனை யனுப்பி விக்கிரமபாஹு சம்மதிக்கச் செய்தும், அவனால் இங்கு அனுப்பப்பட்ட அம்மாது சிரோமணி அலைகடலில் ஆபத்தை யுற வேண்டுமோ? தேவியிடம் பாங்கியா யிருக்கும் இம்மாதே அம்மன்னன் மகளாய இருக்கக்கூடுமோ? மரக்கலம் உடைந்த சந்தர்ப்பமும், மாது அகப்பட்ட சந்தர்ப்பமும், ஒன்றா யிருப்பதால் இப் பெண்மணிதான் ரத்னாவளியாயிருக்க வேண்டுமென்று தோற்றுகிறது. ஆயினும் நான் உறுதியாய்க் கூற முடியவில்லை. நாம் என்ன செய்வ திப்பொழுது?— ஒன்றும் செய்யா திருத்தலே நலம்! இவ்வளவுதூரம் செய்து வைத்த தெய்வம் இன்னும் என்ன செய்கிறதோ பார்ப்போம்! இப் பெண்ணே ரத்னாவளியா யிருப்பாளாயின் இவளைக் கடலினின்றும் கரை யேற்றிய தெய்வம், ஓர் தக்க காதலனையும் கொடுக்காதா பார்ப்போம். அந்தப்புரத்தில் தோழியா யிருக்கும்பொழுது அரசன் கண் முன் படாது போகிறாளோ பார்ப்போம். கண்ணெதிரிற் பட்டால் காரிகை காமனையும் கைவச மாக்குவாள். இத்தகை யெழிலைக் கொடுத்த தெய்வம் அத்தகு நாதனையும் கொடுக்கும். வத்சராஜன் குணமோ நாமறிவோம். வாசவதத்தை யிருந்தும், வனப்பில் மிகு இவ் வனிதையைக்கண்டவுடன் காதல் கொள்வார்—ஆனால் ஒருவேளை இது அரசிசை வேறு படுத்துமோ? முதலில் கோபம்கொள்வாள் அரசி, உண்

மையே, ஆயினும் நாளாவர்த்தியில் அது அடங்கி, தன் நாதன் சுகத்தையே மேலாகக் கருதி சமாதானமாவாள். —நமது எண்ண முடிக்கத் தக்க நண்பன் வசந்தகனே! உண்மையை அவனுக்கும் வெளியிடாது அவனைக் கொண்டு நம தெண்ணம் முடித்தல் வேண்டும். நம்மாலானதை நாம் தளர்வின்றிச் செய்வோம். பிறகு நாதனிருக்கிறார். அவர் விட்ட வழி யாகிறது. நான் எடுத்த காரியம் ஈடேறுமென்று எனக்குள் ஏதோ ஒன்று கூறுகிறது! இககாலமும் நமக் கேற்றதாகவே யிருககிறது, நாளைததினம் மாலை வசந்தோறசவம பட்டணமெங்கும கொண்டாடும்பொழுது, நம தரசரை விநோதம பாாககப பட்டண மெங்கும் அழைத்துச செலலுங்கால அரண்மனை விநோதமும் பார்ப்போ மெனறு அந்தப புரததிலும் அழைத்துச சென்று எபபடியாவது அப பெண்ணைபபாாகரும்படி செயயவேண்டும்.

[போகிறான்.]

பாப்ரவ்யனுடன் வசந்தகன் வருகிறான்.

வச. இபபடி வா, உன்னுடன் ஒரு ரகசியம பேசவேண்டும். இங்கொருவரும் வரமாட்டாாகள்.—நான் கேட்கிறதறகு உண்மையைச சொலலுகிறாயா?

பா. சொலலுகிறேன்.—புஸ்தகம?

வச புஸ்தக மிருக்கட்டும்—நேறறைத் தினம் சமுத்திரக்கரையிலகபபட்ட அந்தப பெண எனன வாயினாள? மஹாராணி எஙகேயாவது ஒளிதது வைததிருககிறாாகளா எனன?

பா. புஸதகம்?

வச. என்ன புஸ்தகம்? இதைச சொல தருகிறேன.

பா. புஸதகத்திலதானே எழுதி யிருக்கிறது, அதைப பார்த்தால தான தெரியும்.

வச. அதிலொன்றும் எழுதியில்லை.—நீ ஞாபகப்படுத்திச் சொல் உனககு என் விததை யெலலாம் கற்றுத் தருகிறேன்.

பா. புஸ்தகம்?

வச. அந்த இழவு புஸ்தகத்தையும் தருகிறேன்.

பா. நான் சொன்னால் அல்ல?

வச. ஆம், சொன்னால்.

பா. சொல்லாவிட்டால்?

வச. சொல்லாவிட்டாலா?—தரமாட்டேன்.

பா. சொன்னால?

வச தருவேன்.

பா. உம்—ராமாயணம்?

வச. என்ன ராமாயணம்?

பா. ராமாயணம் கற்றுத்தரவேணும். தேவியர்கள உங்களுக்குத் தெரியுமென்று சொன்னாகளே.

வச. இதென்னடா இது! கிணறு வெட்டப் பூதம புறப்பட்ட கதையா யிருக்கிறது' இபபொழுது ராமாயணம எங கிருந்து வந்தது?

பா. அது சொலலாமறபோனால் நான சொல்லமாட்டேன்.

வச. இதென்ன தொந்தரவு! ராமாயணத்தைச் சொலவதாவ திப்பொழுது உனக்கு? எத்தனை மாதம் பிடிக்கும? ராமாயண மெனறால சாமானியமா?

பா. உம்—ராமாயணம் எனக்கு எல்லாம தெரியும்.

வச. தெரிந்தால என்னைக் கேட்பானேன்?

பா. ராமாயணத்தில நாலு பெயர் அண்ணன் தம்பிகள் வருகிறார்களே—அவர்கள் பெயாதான் தெரியாது, மற்றதெல்லாம் தெரியும். அதுதான் தெரியவேணும்.

வச. ஓ'—அப்பா!—சுலபமாய் முடிந்ததுவேலை! ஆனால இந்த ராமர், லட்சுமணர், பரதா, சத்ருக்னா, இந்த நான்கு பெயரும் தெரியவேண்டுமோ?

பா. ஆ! அதான்! அதான்! அதான்!

வச. இதைக் கற்றுத் தருகிறேன். நான் கேட்டதைச் சொல்கிறாயா?

பா. உம்.

வச. சரி!—நாலு பெயர், ராமர், லட்சுமணர், பரதர், சத்ருக்னர், சரிதானா?

பா சரி—தான்.

வச. இனி சொல், எங்கெ அந்தப் பெண்?

பா. உம்—உம் அந்த நாலு பெய ரென்ன?—லாமர்—

வச. லாமர் அல்ல, ராமர்; அதிருக்கட்டும்.—அந்தப் பெண்ணெங்கே?

பா சொல்கிறேன்—இதற்குள் இது மறநது போய்விட்டதே! லாமா?

வச. என்ன லாமர்? லாமர் அல்ல. ராமர், ராமர்! தெரிந்ததா?

பா தெரிந்தது.—என்ன கேட்டீர்கள்?

வச. அப்பா!—நேற்று கடலில் அடித்துக் கொண்டு வந்த பெண் எங்கே தெரியுமா?

பா. அது கேட்கிறீர்களோ?—நேற்றைத்தினம் எல்லோரும் போனோமா?—அபபுறம்—மறந்துபோய் விட்டதே—லாமர்—

வச. பபரவாயரே! இன்னொருதரம் லாமரென்றால் எனக்குக் கோபம் வரும். எத்தனை முறை சொல்வது நான்? ராமர்! ராமா, ராமர்! தெரிந்ததா?

பா. ஓ! தெரிந்தது!—ராமா—ரட்சுமணர்—

வச. இதென்ன இழவாயிருககிறது! ரட்சுமணர் அல்ல—லட்சுமணர்.

பா. அதுதான்! லாமர், ரட்சுமணர்—

வச. சரி! பப்ரவாயரே! கடைசிதரம் சொல்கிறேன், இன்னொரு தரம் தபபாகச சொன்னையோ எனக்குக் கோபம் வரும், ராமர், லட்சுமணா! தெரியுமா?

பா. இப்பொழுது தெரிந்தது; கோபித்துகொள்ள கூடாது. உம்.—

வச அபபா!—அந்தப் பெண் எங்கே சீக்கிரம் சொல்.

பா. ஐஐபோ! கோபித்துக் கொள்ளக்கூடாது—ஒரு மனு.

வச. என்ன ?

பா. அப்புறம் சரதரா ? பத்ருக்னரா ?

வச. சுவாமி ! சுவாமி !—தலை விதி !—பரதர் !

பா. பரதர்.

வச. சத்ருக்னர் !

பா. சத்ருக்னர் !

வச. இனிமேல் இதைபபற்றிக் கேட்கவேண்டாம், கேட்டால் எனக்கு மிகவும் கோபம் வரும்.

பா. இல்லை, இல்லை.

வச. சொல் ஆனால்.

பா. என்ன அது ?

வச. என்ன அதுவா ! அந்தப் பெண் எங்கே ?

பா. ஓ ! அதுவா ? சொல்கிறேன்—நேற்று அங்கே போயிருந் தோமா ?—உம—சாயங்காலம—அங்கே போயிருந்தபோது கடலோரம் சாயங்காலம் போனோம்,—

[விரல்விட்டு ஒன்று, இரணடு, மூன்று என்று எண்ணுகிறான்.]

வச. என்ன எண்ணுகிறாய் ?

பா. மூன்று பெயா ஞாபகம் இருக்கிறது. நான்காவது மறந்து போய்விட்டது !

வச. ஐயோ ! இழவே !—சத்ருக்னா !—அப்புறம் சொல்.

பா. ஆம் ! ஆம் ! ஆம் !—என்ன கேட்டீர்கள் ?

வச. என்ன ! விளையாடுகிறாயா என்ன ? எனக்குக் கோபம் வரு மிபபொழுது ! சொலகிறாயா என்ன ?

பா. ஆ ! ஞாபகம் வநதது—பத்ருக்னர்—போயிருந்தோமா ! சாயங்காலம்—கடலோரம்—அப்போ—

[ஒரு புறம் போய் விரல்விட்டு எண்ணுகிறான்.]

வச. [அவன் விரலைப் பிடித்துக்கொண்டு] கடைசி முறை சொன் னேன் ! இன்னொருதரம் விரலை எண்ணினால் நான் போய்

விடுவேன்! அப்புறம் ஒன்றும் கற்றுக்கொடுக்கமாட்டேன். சொலகிருயா என்ன இபபொழுது?

பா. வாத்தியார், கோபித்துக் கொள்ளக்கூடாது, இதோ சொல்லி விடுகிறேன்.—உம—போயிருந்தோமா?

வச. எல்லாம் போய்தான் ஆயிறறே, எத்தனைத் தரம்? அப்புறம்?

பா. முனபு போக வேண்டாமா?

வச. உம! போய ஆயிறறு, அபபுறம்?

பா. போன பிறபாடு,—ஞாபகம் வரவிலலையே!

வச. அதெல்லாம உதவாது நன்ருய் ஞாபகபபடுததிப பார்.

பா. உம்—ஞாபகப் படுத்திளுல லாமர் சமாசாரம் ஞாபகம் வருகிறதே!—

வச. அதெலலாம் வரக்கூடாது! அந்தப பெண் என்ன வாளுள்? அதை மாத்திரம் சொல.

பா. போயிருந்தோமா?—

வச. நான் வருகிறேன்.—போதும்! [போக முயல்கிருன்.]

பா. ஆ! ஞாபகம் வந்தது! ஞாபகம வநதது! இதோ சொல்கிறேன்.

வச. அபபா! இத்தனை இழவா அதறகு?—சொல!

பா. போயிருநதோமா?—அபபுறம்—புஸ்தகம் காணுமறபோயிறறு!

வச. இதை யார கேட்டது? அநதப பெண் எங்கே? எங்கே? எங்கே?

பா. எந்தப் பெண்?

வச. நேறறு கடலோரம் அகபபட்டப பெண்.

பா. எநதக கடலோரம்?

வச. நேறறு நாமெலலாம போயிருந்தோமே அநதக் கடலோரம்.

பா. நாமெலலோரும கடலோரம் போயிருந்தோமா நேறறு?

வச. சரிதான! இந்த இழவைக கட்டிக்கொண்டு அழுவதுடன் குட்டிச சுவரிடம போய முட்டிககொளளலாம். நான் வருகிறேன். [போக முயல்கிருன்.]

பா. [வசந்தகனைப் பிடித்துக்கொண்டு] வாத்தியார்! வாத்தியார்! ஒரே மனு! கோபித்துக்கொள்ளக்கூடாது!

வச என்ன?

பா. இந்த நாலு பெயரும் சரியாகச் சொல்கிறேன்; கேட்டு விட்டுப் போகவேண்டும்.

வச. சொல்லி அழு!

பா. லாமர்—உம்—உம்!—ராமா—ரட்சுமணர்; அலலவே!—லாமர், ரட்சுமணர், சரதர்—உம்—பத்ருக்னா—உம்—சத்ருக்னர்—பரதா—லாமா—உம—பாக்னர்.—ஆ! ஹா! வந்துவிட்டது! வநதுவிட்டது! சதருக்—பாகனர்.—லாமா லங்கா!—

வச. ஹா! ஹா! ஹா! [விடாது நகைக்கிருன்.]

பா. நன்ருய்ச சிரித்தீா! நேற்றைத்தினம் அந்தப பெண்ணை தேவி அரண்மனைக்கு ஒருவரு மறியாதபடி கொண்டுபோகச் சொல்லி, என்னை அந்த வலையில படுத்துககொள்ளும்படி கட்டளையிட்ட பொழுது, இபபடித்தான் சிரிநதாாகள்!—

வச. ஆ! ஆ! அரண்மனைக்கா எடுத்துப போகச சொன்ஞர்கள்?

பா. ஆமாம்—வாத்தியார், அந்தச சிரிப்பைமாத்திரம் எனக்குக் கொஞ்சம் கறறுக்கொடுத்து விடவேண்டும்; எபபடி—ஹா! ஹா! ஹா! [நகைக்க முயல்கிருன்.]

வச. அப்பா! எப்படியாவது சமாசாரம் வெளிவந்ததே போதும. அந்தப பெண் நம தாணமனையிலதானே யிருககிருள் இப் பொழுது?

பா. ஆமாம், அதை உம்மிடம் கூற வேண்டாம் எனருர்கள் தேவி.

வச. சரி, இனிமேல் சொல்லவேண்டாம்.

பா. சொலல விலலை; நீர் அந்தச் சிரிபபு மாத்திரம்—

வச. நாளை யாகட்டும்,—நான் மஹாராஜாவிடம் போகவேண்டும் [விரைவுடன் போகிருன்.]

பா. அந்தமட்டும் நாம் ஒன்றும் சொல்லாமலே இந்த நாலு பெயரையும் கற்றுக்கொண்டோமே!

[லாமர் ரட்சுமணா லாதர் பதருக்னர், என்று சொல்லிக்கொண்டே போகிறான்]

காட்சி முடிகிறது.



## மூன்றாம் காட்சி.

இடம்—நந்தவனத்தின் மாளிகையி லோர் உயர்ந்த மாடம்.

காலம்—சாயங்காலம்.

வத்சராஜன், யௌகந்தராயணன், வசந்தகன் வருகிறார்கள்.

வ. மந்திரி யௌகந்தரா, தோழா வசந்தகா, கண்டீரா இன்று நமது கௌசாம்பி கண்ணெட்டிய தூரம் கடிமணம் புணர்ந்தது போல கவின் பொலிந்து நிற்கிறது! நோக்குதிர் ஒருபால், அந்தண ரராற்றும் அருமறை ஒலியும், செந்தமிழ் வாணர் சிறப்புறு பொலிவும், வாதினில் வல்லோர் வழக்குறு வியப்பும், பாதகமகலப் பழமை சொல் பண்பும், திரைகடலொலியெனத் திரண்டெழுகின்றது; காணமி னித்திசை; இன்னிசையாழினர் இயக்குறு மொலியும், துன்னிய முழவும் தேனிசைக் கருவியும் கன்னியர் கந்தரம் கரந்தெழு மொலியுடன் பன்னிய நாதம் இன்னதெனப் பகரொணாது, பார்ப்பவர் மனங்கவர்ந் தெழுகின்றது. அதோ அங்ஙன், சோலைக ளெங்கும் சூழ் தடாகத்தும், பாலியர் தாமும் பாவையர் தம்முடன், மாலைகள் பெய்தும் மண மலர் கொய்தும், பலவே நீரில் இறங்கி யாடியும், சொற்பல பேசி பற்பல விதமாய், விளையாடுகின்றனர். கற்புடை மங்கையர் கணவர் தம்முடன், அற்புத விதமாய் ஆடியும் பாடியும், நற்பெறு மகிழ்வின் நலங்கொண் டாடுகிறார்; வீதி யெங்கும் விழவுறு வசந்தம் கவிந்து பொலிவதைக் காணுங்கால், அமரர் வாழும் அமராவதியோ, கமலநாதன் கவினுறு நாடோ, செங்க ணெடுமால் சேருந் தலமோ, கங்கையை முடிமேல் அணிந்தோன் நகரோ, எனச் சந்தேகித்தற் கிடமாகிறது— இவை யனைத்திலும் உத்தமப் பொருளாய் உள்ள தெது?

யௌ. அரசே, எப் பொருளை நோக்கினும் ஒப பரியதா யிருக்க, செபபுத லென்னே, இபபெரும் பதியில? ஆயினும் இத் தகை மகிழ்விற்கும் ஹேதுவான நாதன் நீர்தா மாதலின் உம்மையே உத்தம பொருளெனக் கோண்டேன்! ஏனெனில் பிரஜைகளை யெல்லாம் சுகமாய்ப் போஷித்து, சநதோஷ மாய் உறசவம் கொண்டாடும ஸ்திதியில வைததவர் தாமே யாதலின, இககாட்சியின் பெருமை தமமுடையதே! குறை யொன் றின்றி குடிகள வாழவது, குற்றமிலாச செங்கோன் மனனன் செய் தவ மன்றோ?

வ. தோழா யௌகநதரா, எனனிடம் வாஞ்சை உனனியது உன்னை இததிறமகூற! உனறு லனறோ இந நாட் டரசு எழில பெற விளஙகுவது? உன னுதவி யினறி என்று லெனனுப? அருந் திற லமைசசனு முனனிடம அரசை ஒபபுவிததன்றோ, பெருமபாரம் நீஙகிலவனாய, சிறறினப நுகரலானேன நான?

வச. அதிருககட்டும,—அரசே, மநதிரியவாகளைக கேட்ட கேள்வி எனனைக கேட்கவேண்டாமோ? அவரை மாததிரம்தான் கேட்க வேணடுமோ?

வ. உன்னையும கேட்கிறேன, சொல.

வச. இத்தனை ஜனங்களும உறசவங் கொணடாடுவது என் பொருட்டுத தானே?

வ. உன் பொருட்டாவது?

வச. ஐஐயோ! இது தெரிய விலலையா! வசந்தோறசவம கொண் டாடுவது வசநதகன பொருட்டுத்தானே?—ஏன ஐயா, மநதிரியாரே?

யௌ. ஆம, உண்மையே; உனககும் வசந்தனுக்கும் விததியாசம் கொஞ்சநதானே அவன் மன்மதன், நீ மதோன மத்தன்!

சுசங்கதை, இன்னும் இரணடு மூன்று தோழியருடன் வருகின்றனள்.

வ. வசந்தகா, தத்தையின் தோழியா நம்மை நோக்கி வருகிறார்; என்ன விசேஷம் வினவி வா.

வச. இதோ போய் வருகிறேன்.

[படியின் வழியாக இறங்கி வரும்போது எதிராக வரும் தோழியரை நோக்கி]

ஹா !

அன்ன நடையாளே !
மின்ன லிடையாளே !
கன்னல மொழியாளே !
துன்னு மொழிலாளே !
என்ன விசேஷம்மோ ?

தோழியர். இந்த விசேஷமே !

[குங்கும சோநத நீரை வசந்தகன் தலையில் கொட்டி நான்கு பக்கங்களிலு மிருந்து புஷ்பங்களை யிறைக்கிறார்கள்.]

வச. ஐஐயோ ! இதென்ன ? இதென்ன ?

தோழியர். இதென்ன காலம், மறந்தீரோ ?

[எல்லோரும் நகைக்கின்றனர்.]

வச. [திரும்பி அரச னிருக்குமிடம் வேகமாயச சென்று] அபபா !

வ. வசநதகா, இதெனன கோலம ?

வச. இநதக காலததின கோலம் !—

வ. என்ன, விசாரித்து வந்தனையா ?

வச. நானெங்கு விசாரித்து வருவது ? நான தான் விசாரிக்கப பட்டு வநதேனே !

[தோழியர் அரசனிடம் சென்று, அவன்மீது புஷ்பங களைத தூவுகிறார்கள்.]

சு. ஜெயவிஜயீபவ ! எம் பெருமானே ! தேவியவர்கள் இந்தக் காலததில செவ வசோகுமரம் உததியான வனததில பூத் திருபபதால இவ வசந்தோறசவததிறகுரிய மன்மத பூஜையை அதனிடம்செய்ய விரும்புகின்றதாகவும், தாம் அங்கு தயை செய்யவேண்டுமெனறும், விண்ணப்பம் செய்யச் சொன்னாகள்.

வ. இதோ வந்துவிட்டதாகச் சொல்லுங்கள் ; நீங்கள் போங் கள் முன்பு. [தோழியர் வணங்கிப் போகின்றனர்.]

யௌகந்தரா, வசந்தகா, வாருங்கள் நீவிரும்; வாசவதத்தை செய்யும் வசந்தன் பூஜையைக் கண்டு மகிழ்வோம்.

[மூவரும் மேன்மாடியின் வழியே போகிருர்கள்.]

தோட்டத்தில் பூஜைக்குரிய புஷ்பம் முதலானவைகள் வைத்திருக்கும் பாத்திரங்களுடன் வாசவதத்தை, காஞ்சனமாலே ரத்னுவளி, தோழியருடன் வருகின்றனர்.

வா. காஞ்சனு, சாகரிகா, பூஜைக்கு வேண்டிய பாத்திரங்கள முதலான எல்லா வஸ்துக்களேயும் கொண்டு வந்தீர்களா?

கா. கொண்டுவந்திருக்கிருேம், அம்மா.

வா. சாகரிகா, நீ என்ன ஒருவாறு யிருக்கிருய் எப்பொழுது பார்த்தாலும்? மற்றவர்களேப்போல் என்னுடன் தாராளமாகப் பேசுவது மில்லே. உன்னுடைய பூர்வீக விருத்தாந்தத்தையும் கூறமாட்டேனென்கிருய; உனக் கென்ன மனக் கவலே? நாங்க ளெல்லாம சந்தோஷமாய வசந்தோற்சவம் கொண்டாடும்பொழுது நீ மாத்திரம மன வருத்தத்தோ டிருப்பானேன்? உனக்கென்ன குறை இங்கு? சொல.

ர. தேவி, நான விரும்பிய பொருளக ளெல்லாம இவ வரண்மனையி லிருக்கும்பொழுது எனக் கென்ன குறை யிருக்கப் போகிறது?

வா. கணவ னில்லாக் குறை யொன்றுதானே?

ர. என்ன அம்மணி, விளேயாடுகிறீர்கள்!

வா. ஆனல் வா, சந்தோஷ முகத்துடனிரு—காஞ்சனு, நாம பூஜைக்கு ஆரமபிக்க லாமா?

கா. அம்மா, பூஜைக்கு வேண்டிய இன்னும் கொஞ்சம் நறுமலர்களேக் கொய்துகொண்டு ஆரம்பிப்போம.

வா. ஆம், ஆம், அப்படியே செய்வோம். வசந்தகால மாதலால் நம்முடைய உத்தியான வனம் நன்றுய்ப புஷ்பித்து என்ன அழகாய் விளங்குகிறது! இவ வழகிய மலர்களேக் கொய்வோம் விரைவில. [சந்தோஷமாய் பேசிக்கொண்டும் பாடிக் கொணடும மலர்களேக் கொய்கிருர்கள்.]

கா. தேவி, தாம் வளர்த்துவரும் ஜாதி மல்லிகை என்ன ரமணீயமாய்ப் புஷ்பித்து இருக்கிறது பாரும்! இதோ இதனருகிலிருக்கும் மஹாராஜாவின் பிரியமான செடியாகிய நவமாலிகையும் புஷ்பித்திருக்கிறது! அதோ, அப்பெரிய புஷ்பத்தைப் பாரும், கண்டவா மனம் கவாகிறது! உமது மல்லிகைச் செடி காற்றி லசைந் தாடுவது அந்த நவமாலிகை மலரைப் பெற விரும்புவதுபோலன்றோ இருக்கிறது?

வா. சரிதான், சீக்கிரம் பறியுங்கள் நேரமாய்விட்டது.

ர. இம் மலா என் மனம் கவாகிறது! [பறிக்கிறாள்.]

கா. ஐயோ! சாகரிகா! என்ன அம் மலரைக் கொய்து விட்டாயே! தேவியவாகள் மஹாராஜாவுக்கு தான் கொடுப்பதற்காக வைத்திருந்தார்களே!

சா. ஐயோ! நான் என்ன செய்வது? எனக்குத் தெரியாதே!

வா. சரி! இனி என்ன செய்வது? போனாற் போகட்டும், வாருங்கள், பூஜை ஆரம்பிப்போமா?

ஒரு தோழி வருகிறாள்.

தோ. தேவி, மஹாராஜா உத்தியான வனம் வருகிறதாக விரைவில் சொல்லி யனுப்பினா.

வா. [ஒரு புறம் காஞ்சனையுடன்] காஞ்சனா, இப்படிவா கொஞ்சம். நான் என்ன தப்பிதம் செய்தேன்! இந்த சாகரிகையை மஹாராஜாவின் கண்ணெதிிரப் படாதபடி வைத்துக் கொண்டிருந்தோமே, இப்பொழுது இங்கு மஹாராஜா வருவாராயின் இவளைப் பார்க்கும்படி நேரிடுமே?

கா. ஆமாம், அம்மணி! விரைவில் ஏதாவது போக்குச் சொல்லி யனுப்பிவிடும் அந்தப்புரம்.

வா. ஆம், அதுதான் யுக்தி—சாகரிகா, உன்னிடம் ஒப்புவித்த அந்தச் சாரிகைப் பக்ஷியை அந்தப்புரத்தில் தனியாக விட்டு வந்தனையே! இந்த வசந்தோற்சவ காலத்தில் அதன் கூண்டை யாராவது திறந்து விட்டுபோகிறார்கள், நீ போய் அதை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டிரு. உன்

கையிலுள்ள மலர் முதலியவைகளை யெல்லாம் காஞ்சன மாலையிடம் கொடுத்துப் போ சீக்கிரம்.

ஸ. அப்படியே, அம்மா. [பூஜைத திரவியங்களைக் காஞ்சனையிடம் கொடுத்துப் போகிருள்.]

வா. அம்மட்டும் நல்ல யுக்தி செய்தோம்! இல்லாவிட்டால் இவ் வழகிய சிறுமி நம்மவர் கண்ணெதிர்பபட்டால் பிறகு சங்கடத்திற் கிடமாகும்.—காஞ்சனா, இனி நாம் பூஜை செய்ய ஆரம்பிப்போம், நேர மாகிறது.

கா. இதோ இச செவ் வசோகமரத் தடியிலதான் பூஜை செய்யவேண்டும்.

[தோழியர் அசோகின்கீழ் மன்மதன் விக்கிரகத்தை வைக்க வாசவதத்தை பூஜை செய்கிருள். ஸதனுவளி மறுபடியும் வந்து மறைந்து கொணடு நடப்பதைப் பார்க்கிருள்.]

ஸ. [தனக்குள்] அப் பட்சியைத்தான் என் னுயிராத தோழியா கிய சுசங்கதையிடம் ஒபபுவித்து வந்தேனே; அதறகொரு குறையு மிலலை. இங்கே நான் மறைவிலிருந்து ராணி செய்யும் பூஜையைப பாாக்கிறேன். நம்முடைய தந்தை தேசத்தில் செய்யும் பூசனைககும் இங்கு நடப்பதற்கும் என்ன பேத மிருக்கிறதோ கவனமாயப பாாபபோம்— ராணி என்னை ஏதோ காரணம்பறறி இங்கிருகக லாகா தென்று அனுபபி விட்டாறபோல தோன்றுகிறது. ராணி யும் காஞ்சனமாலையுமெ ஏதோ மறைவாகப பேசினாகள்! என்னவோ தெரியவிலலை.—மஹாராஜா இங்கு வரபபோகி றாராம்; இங்கு வநது நானிததனை நாட்களாகியும் என் கண்ணார ஒரு முறையாவது நான் பாாத்ததில்லை எப்படி யும் இங்கு இன்று வரப்போகிறு ரலலவா? இந்த மறை விடத்திருந்து பாாபபோம்—ஆ! என்ன எனது இடது நேத்திரம் துடிககிறது! என்னையு மறியாவணணம் எனக் கொரு சந்தோஷ முண்டாகிறது! இதென்ன, நான் மஹா ராஜாவைக் கண்ணாரக் காணப்போகிறேன் என்னும் எண் ணத்தினலோ? என்ன பிரயோஜனம்? அந்த ஆசையெல் லாம் அன்றேடு விட்டேனே! ஆயினும் என்ன ஆச்சர்யம்!

மஹாராஜாவை நான் ஒரு முறையும் பார்த்தவ ளல்ல, அப்படி யிருந்தும் அவரைப்பற்றி நினைக்கும்பொழு தெல்லாம் அடங்கா இன்ப மெனக் குண்டாவ தேன்? இதுவோ காதல்? காணுமுன் காதல கொள்வார்களோ?—ஹா! நம் தந்தை நினைத்த தென்ன? இப்பொழுது நடந்ததென்ன? —என் விதிப்படி யாகிறதெல்லாம்!

[வத்சராஜன் வந்து ராணியின் பின்புறம் உட்கார்ந்து கொள்கிறான். அவன் பின் யௌகந்தராயணனும் வசந்தகனும் வந்து ஒரு புறம் பேசிக்கொண்டிருக்கின்றனர்.]

ஹா!—இவர்தானோ!—இவர்தானோ!—இவர்தானோ என் பிராணநாதர்!—என் பிராணனைக் கவரும் நாதர்! நான் இவ்வரண்மனையி லிருந்தும் இதுவரையில் உடம்மை என் கண் குளிரக் கண்டு மகிழாது என் வாழ் நாட்களை வீணாக கழித்தேனே! என கண்களைக் கவரும் காதலா! உம்மைக்காண நான் இரண்டே கண்களைப் பெற்றேன்! ஹா! நம்மை இங்கு யாராவது பார்த்துவிடப்போகிறார்கள் இந்த ஸ்திதியில! ஐயோ! என் துர்ப்பாக்கியத்தை என்னென்று சொல்வேன? இவ வனங்களை வென்ற ஆடவருக்கே நான் வாழ்க்கைப்படும்படி தீர்மானிக்கப்பட்டு, என் பிதா என்னை யிங் கனுப்பி யிருக்க, இவரை அஞ்சாது நான் நேரிற காணவும் சக்தியற்றவளாய இந்த ஸ்திதிக்கு வரவேண்டுமா? ஓ! இப்பொழுது தெரிகிறது, மஹாராணி என்னை இங் கில்லாதபடி போக்குச சொல்லி அனுப்பி விட்ட காரணம்! எங்கு நான் இங்கிருந்தால இம் மஹா புருஷனைக் கண்டு காதல கொள்கிறேனோ என்று அனுப்பி யிருக்க வேண்டும். இவரை நான் நேரிற காணுமுன்னே இவர்மீது காதலகொண்டேனே! அதனைத் தடுக்க இனி யாவரால முடியும?—காதலா! உம்மைக காணு முன்னமே காதல் கொண்ட இம்மாது நேரிற கண்ணாரக் கண்ட பின் என செய்வாள், எப்படி உயிர் தரிப்பாள், உம்மையடையாது?—உமமுடைய காதலைப் பெறறு உமது மனைவியாகாவிட்டால நான் உயிர் தரிப்பேனோ இனி இப் புவியில்?

—ஐயோ ! நீர் அங்கத்துடன் அருகி லிருந்தும் தேவி வேறு எங்கேயோ பூஜை செய்கின்றனளே ! என் மனத்தைக் கவரும் மதனா ! உமக்கே நான் பூஜை செய்கிறேன் ! ஏற்றுக் கொள்ளும். இதோ நீர் விரும்பிய புஷ்பம் !

[ஒரு புஷ்பத்தை அரசன் பாதத்தில் எறிகிறாள். அதை எங்கிருந்து வந்ததென் றறியாதவனாகி அரசன் எடுத்துக் கொள்கிறான்.]

ஹா ! என் பூஜாபலம் இன்றே நிறைவேறியது! அதோ அப புஷ்பத்திற்கு முத்த மிடுகிறார் ! பிராணநாதா ! ஐயோ ! அம்மலரா யிருக்கலாகாதா இந்த நிமிஷம நான !

[அரசனைப் பூசிக்கிறாள்.]

ஐயோ ! அதோ சுசங்கதை என்னைத் தேடுகிறாள். என்னைத் தேடி இங்கு வருவாளாயின் நான் இங்கிருப்பது வெளியாகி விடும். நான் என் காதலரை விட்டுப்போக வேண்டும். என் பிராணனை யாளும் நாதா ! நான் போய் வருகிறேன் ! —கடைசி முறை பார்த்துவிட்டுப் போகிறேன் கண் குளிர! —இன்னொரு முறை!—கடைசி முறை—நான் வருகிறேன்! வருகிறேன் !—பிராணநாதா, வருகிறேன் ! எப்படியும் உம்மைப் பெறுகிறேன் ! [மறைவிடமிருந்து போகிறாள்.]

வா. [பூஜை முடித்து] மஹாராஜா வந்துவிட்டனரா ? [திரும்பி] ஹா ! பிராணநாதா ! எப்பொழுது வந்தீர் ?

வ. கண்ணே, முன்பே வந்தேன். ஆயினும் நீ பூஜையி லிருப்பதைக் கண்டு இப்பொழுது அதனைக் கலைக்க லாகாதெனப் பின்புறமாய் நின்றிருந்தேன்.

வா. [தோழியரை நோக்கி] ஏன் நீங்களாவது முன்னமே யென்னிடம் கூறவில்லை ?

வ. கண்ணே, அவர்கள்மீது கோபியாதே வீணில் ; நான் தான் கூறவேண்டா மென்று சொன்னேன்.—பூஜை முடிந்ததா ?

வா. ஆம், பிராணநாதா, அங்கு பூஜை முடிந்தது. இனி தாம் பூஜை ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான்.

வ. கண்ணே, உனக்கேனிந்த கஷ்டம் ?

வா. ஒரு கஷ்டமு மில்லை; பிராணநாதா, இப்படி இந்த ஆசனத்தி லுட்காரும்.

[அரசன் ஓர் ஆசனத்தில் உட்காருகிறான். அரசி அவனுக்குச சந்தனம, புஷ்பம் பழம் முதலியன கொடுக்கிறாள்.]

காஞ்சனா, மந்திரியவாகளுககுப பிரசாதம் அளிபபாய்.

[காஞ்சனை மந்திரிக்குப் பிரசாதம் கொடுககிறாள்.]

யௌ. [பிரசாதததை வாஙகிக்கொண்டு] மஹாராணியின் பாக்யம்.

வா. வசந்தகனுக்குமு கொடு.

வச வசந்தகனுக்—கும் கொடு.—காஞ்சனா, நீ கொடுத்தால் நான் வாங்கிககொள்ள மாட்டேன். எங்கே என் சுசங்கதை?

கா. சுசங்கதை இங்கே இல்லை; ஆனால் சும்மா இரும்.

[சற்று தூரததில் தாம்பாளத்தை வைத்து விடுகிறாள்.]

வச. அபபா! நீ கொடுக்காவிட்டால் நானாக எடுத்துக் கொள்ளு கிறேன. [தாம்பாளததிலுள்ள யாவும எடுததுக கொள்கிறான்.]

வா. வசந்தகா, என்ன அவவளவையும் எடுததுக்கொண்டாயே இதோ பாப்ரவயன வருகிறான், அவனுக்குமு கொஞ்சம் கொடு.

நான்கு மூலைகளிலும் முடி போட்ட சவுக்கம் ஒன்றுடன் பாப்ரவ்யன் வருகிறான்.

வச. ஆ! வா ஐயா! வா ஐயா! நலல சமயத்தில்தான் வந்தாய்!— அம்மணி, இவருககு நான் பூசை கொடுப்பதா?

பா. வேண்டாங்கள்!

வச. பாாத்திரகளா, வேண்டாமாம். [தின்ன ஆரம்பிக்கிறான்.]

வா. வசந்தகா! பூஜையுமு வேண்டாம் ஒன்றும் வேண்டாம், கொஞ்சம் பிரசாதம் கொடு.

வச. அபபடியோ?—வா ஐயா, இப்படி உட்கார். நம் மிருவருக் கும் இதில் சரி பங்கு! இதோ வாழைபபழ மிருக்கிறதே, அதில தோல் எல்லாம் உன்னுடையது, உள்ளே இருப்ப தெல்லாம் என்னுடையது! இந்த ஜம்பு நாவல் பழ மிருக்

கிறதே, அதில் தோல் எல்லாம் என்னுடையது, உள்ளே இருக்கிறதெல்லாம் உன்னுடையது! தெரிகிறதா?

வா. வசந்தகா, விளையாடாதே, ஏதாவது கொடு, பாபம்.

வச. இதோ கொடுக்கிறேன்,—சாபபிடு, ஐயா.

[வாழைப்பழம் ஒன்றை அவன் முன் வைக்க, அவன் அதன் தோலை நீக்கி விழுங்க ஆரம்பிக்கிறபோது பிடுங்கிக் கொள்கிறான். இப்படியே இரண்டு மூன்று முறை வசந்தகன் பார்ப்பனை யேமாற்றுகிறான்.]

பா. எனக்கு வேண்டாங்கள இனிமேல.

வச. பார்த்தீர்களா, அவருக்கு வேண்டாமாம.

வா. போதும் நீ கொடுத்தது!—பாபரவயா, நீ வீட்டிற்கு மூட்டை கட்டிககொணடு போ.

வச. பாபம்! போனுற போகிறது. அவிழும் குடடையை; என்ன ஐயா இதில முடிச்சுகள?

பா. அது சொலலக்கூடாதுங்கள.

வச. சொலலககூடாதா? என்ன முடிச்சு? அவிழ்த்துப் பார்ப்பதா?

பா. ஐ ஐயோ! வேண்டாம, வேண்டாம்!

வச. பின்னை என்ன சொலலும.

பா. நீங்கள் சொலலக்கூடாது உம மெதிரில் என்றீர்களே?

வச. நான் என்ன சொலலககூடாதென்றேன்? என்ன ஐயா இது? [முடிப்பொன்றை யவிழ்க்க அதில யாதொன்று மில்லா திருக்கிறது.]

பா. ஐஐயோ! போயவிட்டது! போயவிட்டது!

வச. என்ன போய்விட்டது! என்ன ஐயா இது?

பா. இது ஒருத்தர!

வச. என்ன ஒருத்தர்?

பா. அது இன்னொருத்தர்—அது மூனுவது ஒருத்தர்.

வச. யார்?—என்ன பயித்தியமா?

பா. இல்லையுங்கள் ! சொன்னால் கோபித்துக் கொள்ளக்கூடாது!

வச. இல்லை, சொல்.

பா. [முடிப் பொன்றைக் காட்டி] இது லாமர் !—

வச. ஓகோ ! போதும் ! போதும் ! போதும ! ஐயோ ! போதும் !

[எல்லோரும நகைககிறார்கள். இநதச சமயத்தில் வைதாளிகர் உளளிருந்து அந்திபபோதை அறிவிக்கின்றனர்.]

வ [எழுந்திருந்து] பிராணநாயகி, இபபடி வேடிக்கையாய்ப் பேசிககொணடிருநததில நமமையும அறியாதபடி பொழுது போயவிடடது பாாததனையா ? இருட்டிவிட்டது; அதோ சநதிரன இபபொழுதுதான் உதய மாகிறான்; பாாத்தனையா?

வா. பிராணநாதா, அது ஏன் சநதிரன் இப்பொழுது அவவளவு பிரகாசமாய்த தோறற விலலை ?

வ. கண்ணே, உன வதனத்தைக கண்டு மதி மழுஙகினான் !

வா. அலலது உதயனனாகிய உமமைக் கண்டு மதி குறைநதானோ?

வ. [நகைதது] சரிதான் ! வா போவோம். அரணமனைககு.— யௌகநதராயணரே, வசந்தகா, விடை பெறறுக கொளளுஙகள் [அரசனையும அரசியையும அவ்விருவரும் வணஙகுகிறார்கள்.]

வச. இநதப பபபரவாயருககும் விடையளியும்.

வா. வசந்தகா, உனக கெததனை முறை கூறியிருக்கிறேன் இவனைப பாபரவயன் என்றழை என்று ?

வச. அபபடித்தானே அழைக்கிறேன பாபரவாயன் என்று.

வா. மறுபடியும் பார !

வச. என்ன ? அம்மணி, சரியாகத்தானே சொன்னேன்—பப்பரவாயன் !

வா. பாப்ரவயன் !

வச. ஆமாம், அம்மணி, பாப்ரவயன் என்று வாயில் வரவில்லையே?

வா. இப்பொழு தெபபடி வந்தது ?

வச. பாப்ரவயன் என்று சொல்ல வா யெடுக்கிறேனு, அது பப்பரவாயன் என்று முடிகிறது ! நீங்கள் வேண்டுமென்ருல் பாருங்கள். [பாப்ரவ்யன் என் ருரம்பித்து பப்பரவாயன் என்று முடிக்கிருன் ]

வா. சரி ! உன்னுடன் பேசுவதில் பிரயோஜனமில்லை.—வாரும் பிராணநாதா.

[ஒரு புறம் அரசனும் அரசியும் போகிருாகள். மற்ெருரு புறம் மற்றவர்கள் போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.

—••••••—

# இரண்டாம் அங்கம்

## முதற் காட்சி.

இடம்—அரசியின் தோட்டம். காலம்—காலை

ரத்னுவளி வருகிருள.

ர. ஆ ! பெண் புத்தி பின் புத்தி எனப துண்மைதான ! இலலா விடின் நான் இநத ஸதிதிககு வநத பிறகு மஹாராஜாவின மீது காதல கொள்வேனு ?—மனமே, நீ என்ன மதிமோசம் போயினை ! பெறற் கரிய வத்சராஜன்மீது நீ காதலகொண்டு பெறபபோகிற பயனெனன ? ஒரு முறை கண்டவுடன் உன்னை இக்கோலங் கண்ட அவரை யேன் இவவாறு நாடு கிருய் ? உன்னை இத்தனை காலம் போஷிததுவந்த என்னை விட்டு ஒருதரம பார்தத அவரிடம போய்ச் சேர்ந்தனையே ! ஐயோ உன்னை தூஷிப்பதிற் பயனென்ன ? அநங்கன் விடும் வாளிக கஞ்சி அரசனிடம் போய்ச சோந்தாய் நீ அபய மென்று ! அவருனனைக் காபபாறறப போகிருரோ ? அவரோ வாசவதத்தையின் வலையிற் சிக்கி யிருக்கிருர். சீ ! ராணியை வீணில் வெறுபபானேன் நான் ? பிராணநாதா ! உம்மைக் கண்ட யார்தான் உமமீது காதல் கொள்ளமாட்டாாகள் ? —அவரவர்கள் கொடுத்து வைத்ததுதானே கிடைக்கும் ! வாசவதத்தை கொடுத்துவைத்தவள், அனுபவிக்கிருள்

நான் கொடுத்துவைத்த திவ்வளவுதான்.—ஐயோ ! விதியே ! விதியே !—ஹூம்,—என் பிராணநாதரை நேரிற் காணக் கொடுத்துவைக்காமற் போனாலும் படத்திலாவது எழுதிக் கண்டு கண் குளிர்கிறேன்.— ஐயோ, பிராணநாதா, உம்மை நேரிற் கண்ட கண இதனைக கண் டெவ்வாறு சகிக்கும் !

[அரசனைப்போல் சித்திர மெழுதுகிறாள்.]

பின் புறம் சுசங்கதை வருகிறாள்.

சு. இதுதான் நிபுணிகை குறித்த இடம் — ஆ ' அதோ இருக்கிறாள் சாகரிகை. நான வநததையும பாராது ஏதோ மிக்க கவனததுடன் எழுதிக்கொண்டிருக்கிறாள். என்ன எழுதுகிறாள் மறைந்து பார்ப்போம் அதை.—ஓ ! மஹாராஜாவின் படம் ! சரிதான், நாம் நினைத்தபடி ஆயிற்று ! அன்னப்பட்சி தாமரைத் தடாகத்தையே நாடும் !

ர. ஐயோ ! என் காதலரின் படததை நான் கண்டு மகிழாதபடி என கண்ணீர மறைககிறதே.

[கண்களிற சிந்தும நீரைத் துடைததுப் பிறகு சுசங்கதையைச சமீபததிற கண்டு படததை மறைத்துக கொள்ளுகிறாள்.]

உட்கார், என்ன சமாசாரம ?

சு. ஒன்று மில்லை ;— சாகரிகா, நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய் தனியே இஙகு ?

ர. ஒனறுமில்லை.

சு. உம்— அந்தப பலகையில் எழுதிக்கொண்டிருந்தது கூட ஒன்று மில்லையோ ?

ர. அதை எபபடிப பாரததனை நீ ?

சு. பார்த்தேன் ; உனககென்ன ? யாருடைய படம் அது ? பாரக்கலாம் காட்டு இபபடி. உனக்கு படம் எழுத நன்றாயத தெரியுமா இல்லையா பார்பபோம. கொடு இபபடி.

ர. வேடிக்கைககு எழுதினேன. இநத வசந்த காலததிறகுரிய மன்மதனை எழுதினேன், வேறொன்று மில்லை. அதை நீ யேன் பார்க்கவேண்டும ? அழித்துவிடுகிறேன் நான்.

சு. அழிக்காதே, கொடு இப்படி.— [வாஙகிப் பார்த்து] என்ன அழகா யிருக்கிறது! ஆனல ஒனறுதான் குறைவா யிருக்கிறது! அதைப பூர்ததி செயகிறேன்.

[அதில் ரத்னுவளியின உருவை எழுதுகிருள்.]

ர. [கோபித்து] சுசங்கதா! இதென்ன இது? என உருவை எழுதினையே பக்கததில?

சு. வீணுகக் கோபித்து கொளளாதே என்மேல, நீ மன்மதனை எழுதினுல, அநத மன்மதனுக கேறற ரதி தேவியைப பக் கததில எழுதினேன்! அவவளவுதானே! இதற்குக் கோபமா?—விளையாட்டு அபபுறம் இருககட்டும. சாகரிகா, உண்மையைக் கூறு என்னிடம், உனககுப பயமென்ன?

ர. [தனக்குள்] ஐயோ! நமது தோழி உண்மையை அறிந்து கொண்டாள்! இனி ஒளிப்பதிற் பயனிலலை!—பிரியசகி, நான் என்ன சொலவது? எனககு வெட்கமா யிருககிறதே!—நான் சொலவதை நீ ஒருவரிடமும் கூறுவதிலலையெனறு பிரமாணம் செய.

சு. சாகரிகா, நீ வெட்கப்படுவானேன்? உன்னை யொதத பேரழ குடையாள் மனம் அரசரை நாடியது ஓா ஆசசரியமோ? பெரும நதி சாகரத்தையே சேருமன்றே?—உன மனததை நான் ஒருவருககும வெளியிடேன அஞசாதே. எங்கே ஒருவேளை இநதப பட்சி பிதற்றி விடுகிறதோ என்றுதான் நாம் யோசிககவேண்டும்; ஒன்றும் ஒளியாது உன் உள்ளத் தைச சொல.

ர. பிரிய சகி, நான் என்ன செயதேன்? இந்தத் தாபம் என் ஞல் தாங்க முடியவிலலையே!— [சயனிததுக்கொள்கிருள்.]

சு. என்னுயிர்த் தோழி, மனததை திடப்படுததிககொள்; ஒன் றும் அஞசவேண்டாம்.—இதோ நான அருகிலுள்ள இந்தத தடாகத்தினின்றும் தாமரை இலைகளைககொணடு வருகிறேன். [சில தாமரை யிலைகளால் ரத்னுவளியின தாபத்தைத் தணிக்கிருள்]

ர. பிரியசகி, போதும், போதும். இவைகளை எடுத்துவிடு! இவைகளால் என் தாபம் தணியுமோ? நான் பெறுதற்கு அசாத்தியமான புருஷன் மீது காதல் கொண்டு விட்டேன்! இதனால் நான் ஒரு பயனும் அடையப்போகிறதில்லை! என் காதலையோ என்னால் அடக்க முடியவில்லை!—அவர் என்னைக் கண்ணெடுத்தும் பார்க்கப்போகிறதில்லை! நான் இறப்பதே நலம். [மூர்ச்சிக்கிறாள். தோழி விசுறுகிறாள்.]

சு. ஐயோ! விரகத்தால் மூர்ச்சையானாள்!

[உள்ளே உரத்த சப்தமாய் "ஆ! பிடியுங்கள், பிடியுங்கள்! குரங்கு அறுத்துக்கொண்டு வருகிறது! பிடியுங்கள், பிடியுங்கள்!" என்று கேட்கிறது.]

சாகரிகா! எழுந்திரு! எழுந்திரு! அந்தக் குரங்கு இவளிடம் ஓடி வருகிறது!—

ர. [மூர்ச்சை தெளிந்து] ஐயோ! நாம் என்ன செய்வது?

சு. இப்படி வா. இச் செடி மறைவில் ஒளிந்து கொள்வோம்.

[சித்திர மெழுதிய பலகையைப் போட்டுவிட்டு இருவரும் ஓடி ஒளிந்துகொள்கிறார்கள். அங்கே குரங்கொன்று குதித்து பட்சியின் கூடைத் திறந்துவிட்டு ஓடிப்போகிறது. பட்சியும் பறந்தோடிப் போகிறது.]

மறுபடியும் ரத்னாவளியும் சுசங்கதையும் வருகிறார்கள்.

ர. அப்பா! போய்விட்டது அந்தக் குரங்கு! சுசங்கதா, அந்தச் சித்திரப் பலகை எங்கே? எங்கே வைத்தாய்? யாராவது பார்த்துவிடப் போகிறார்கள்.

சு. அதிருக்கட்டும்—இப்பொழுது அந்தப் பாழும் குரங்கு இந்தக் கூண்டைத் திறந்து சாரிகையை வெளியில் விட்டு விட்டதே! ஐயோ! அதைச் சீக்கிரம் ஓடிப்பிடிப்போம். இல்லாவிட்டால் மஹாராணி மிகவும் கோபிப்பார்கள். அன்றியும் நாம் பேசியதை எல்லாம் இது சொல்லிவிடும் யாருக்காகிலும். வா போவோம் சீக்கிரம்.

[இருவரும் வேகமாய்ப் போகிறார்கள்.]

**பாப்ரவ்யனும், டாமரவ்யனும் வருகிருர்கள்.**

பா. தம்பி !

டா. அண்ணு !

பா. இப்பொழுது நாம் அரண்மனை அருகில் வந்திருக்கிருேம். நிரம்ப ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்.--ஒன்றும் பேசாதே, எது கேட்டாலும ஆமாம் என்று சொலலிவிடு. தெரியுமா?

டா. ஆமாம் ! ["அதோ குரங்கு ! அதோ குரங்கு !" என்று உள்ளே சந்தடி கேட்கிறது.]

பா. [பயந்து] ஆ ! குரங்கா ?

டா. ஆமாம் ! [நகைத்துக்கொணடே]

பா. ஐயோ ! எங்கே ? எங்கே ? [நடுங்குகிருன்.]

டா. ஆமாம் !

பா. ஐ ஐயோ ! சரியாகச சொல்லடா தம்பி ! சரியாகச சொல !

டா [உரத்து] ஆமாம், அண்ணு !

பா. ஆ ! அதோ வருகிருற்போ லிருககிறதே !

டா. ஆமாம் ! [வேகமாய்ப் பாப்ரவ்யன் ஒளிந்து கொள்ள, டாமரவ்யன் சாவகாசமாய்ப் பின் தொடர்கிருன்.]

**வசந்தகன் வருகிருன்.**

வச. என்ன ஆசசரியம் ! கந்ததாசன் கூறியது உண்மையே ! கால மலலாக் காலத்திலும், இம் மலலிகை அவனுற செய்யப்பட்ட தோகதத்திலை எபபடி புஷ்பித்திருக்கிறது ! நான் மஹாராஜாவிடம் போய் இதைச சொலகிறேன. பக்கத்திலிருக்கும் ராணியின் மாதவியைப பார்த்து நகைபபதுபோலன்றே இருக்கிறது !—

டா. [உள்ளிருந்தபடியே] ஆமாம் !

வச அடடா ! இது யாரிங்கே ஒளிநதுகொண டிருககிறது ? ஆ ! இரண்டு பெயர் !—பப்பரவாயரே ! என்ன செய்கிறீரிங்கே ? இது யார் ? [இருவரும் வெளியே வருகின்றனர் ]

பா. வாத்தியார், கோபித்துக்கொள்ளக் கூடாது, இவன்—

டா. ஆமாம் !

வச. யார் ?

பா. நான் முன்பே சொன்னேனே—

டா. ஆமாம் !

வச. என்ன ?

பா. மஹாராஜாவிடம் மந்திரி வேலைக்கு—ராணி அவர்கள்—ஒருவன் வேண்டு மென்றார்களே—

டா. ஆமாம் !

பா. வாயை மூடிக்கொள்.

வச. மந்திரி வேலைக்கா ?—யார் இவன் ?

பா. இவன்—என் தம்பி !

டா. [வாயை மூடிக்கொண்டே] ஆமாம்.

வச. [நகைத்து] ஓ ! சரிதான் ! சரிதான் ! சரியான மந்திரி !—ஏன் ஐயா ! நீ என்ன, முழு பைத்தியமோ ?

டா. ஆமாம் !

வச. சரி ! சரி ! கேட்கவேண்டிய தில்லை—அதோ மஹாராஜா வருகிறார். இப்பொழு திங்கிருக்கவேண்டாம். இன்னொரு வேளை பார்த்துக்கொள்வோம். போங்கள் !

பா. தம்பி, குடியைக் கெடுத்தாயடா !

டா. ஆமாம், அண்ணா !

பா. [தலையில் அடித்து] உன்னை எதைக் கேட்டாலும் ஆமாம் என்று சொல்லச் சொன்னேனா ?

டா. [அழுத வண்ணம்] ஆமாம் ! அண்ணா !

பா. தலை விதி ! தலை ! விதி !

வச. பப்ரவாயரே, இந்த அமிந்திரி பெயரென்ன ?

பா. டாமரவ்யன்.

வச. ஓ ! சரிதான்; பப்ரவாயன் தம்பி டமாரவாயன் ! போங்கள், போங்கள், சீக்கிரம்.

[பாப்ரவ்யனும், டாமரவ்யனும் போகிறார்கள்.]

**யோசித்த வண்ணம் வத்சராஜன் வருகிருன்.**

வ. தேவி அதைக் காண்பா ளாயின் கோபிப்பாள்; மலர்களெங் கனும் விளங்க இது தன் மாதவியினும் சிறந்து விளங்கு வதைக் கண்ணுற்ருல் மாது மனங் கோணுவாள்; அவள் கோபத்தை எங்ஙனமாவது நாம் சாந்தப் படுத்தவேண்டும். நேற்றிரவு இம் மலரொன்றை நான் சூடி யிருந்தேனென்று மல ரணையில ஊடினள.

வச. ஜெயவிஜயீபவ! அரசே, அதிஷ்டம் நம்முடைய பக்கம் தான்.

வ. ஆம், தோழா, ஆயினை கோபம் வாசவதத்தையின் பக்கமா யிருக்குமே, அதற்கென்ன செய்வது என்று யோசிக்கிறேன்! என்ன அழகாய்ப் புஷ்பித திருக்கிறது! மூலிகைகளின் செயலே செயல்! கால மல்லாக் காலத்திலும்—

வச. அரசே, அதென்ன கேட்டீரா?

வ. என்ன?—

வச. எனக்குப் பயமா யிருக்கிறது! வாரும், வாரும்! ஓடிப் போய்விடுவோம! [வற்புறுத்தி யிழுக்கிருன்.]

வ. என்ன பயிதியக்காரனு யிருக்கின்றனே? என்ன சமா சாரம்?—ஏன் உடல் நடுங்குகிறது?—

வச. அதோ—அந்த—பகிழ மரத்தி லிருந்து ஒரு பிசாசு பேசு கிறது!

வ. மூடனு யிருக்கிருய்! இதென்ன பயம்? இப்பொழுதாவது பிசாசு பேசுவதாவது! நில்!

வச. ஐயோ! நன்ருய்ப பேசுகிறது!—நம்பாவிட்டால் நீர் போய்க் கேட்டுபபாரும்.

வ. [முன் வந்து] ஆம் எனக்கும் ஒரு குரல் கேட்கிறது! மெல் லியதாயும் மனேஹரமாயும் ஸ்திரீயின் குரலைப்போல் இன் பந் தருவதாயு மிருக்கிறது!—சிறு குரலாயிருப்பதால் மைனுவின் குரலா யிருக்கவேண்டும்!—ஆ! அதோ பார்த் தனையா உட்கார்ந் திருக்கிறது?

வச. மைனாவா ?

வ. [நகைத்து] ஆம், ஆம் ! அதோபார் மைனா !

வச. ஆனால் அந்த மைனாவைப் பார்த்தா பிசாசென்று இப்படிப் பயந்தீர்கள் சற்று முன்பாக ? ஐயோ ! இந்த வெட்கத்தை யாருடன் சொல்வது நான்.

வ. ஓகோ ! வசந்தகா, நீ பயந்ததை என் மீது சாற்றுகின்றனை யா ? ஓ !

வச. நானா பயந்தேன் ? கொஞ்சம் பொறுங்கள் காட்டுகிறேன். —கர்வம் பிடித்த பட்சியே ! நான் பிராம்மணனென்று கொஞ்சமாவது மரியாதை யில்லாமல் பேசுகிறாயா ? அப்படியே இரு கொஞ்சம். இந்த வளை தடையால் விளாம் பழத்தை வீழ்த்துவதுபோல உன்னை வீழ்த்துகிறேன்.

வ. பொறு ! பொறு ! அது என்ன இனிப்பாய் பேசுகிறது ? அதை துரத்தி விடாதே.

வச என் வீரத்தை ஒப்புக்கொள்ளுகிறீரா ?

வ. ஆம், ஒப்புக்கொள்ளுகிறேன்.

வச. ஆனால் சரி ! என்ன பேசுகிறது கேட்போம்—ஓ !—அது பேசுகிறதைச் சொல்கிறேன் கேளும்.—இந்தப் பிராமண னுக்கு ஏதாவது பட்சணம் கொடுங்கள்.—

வ. இது தவிர வேறு ஒன்று முனக்குத் தெரியாதா ? எப் பொழுது பார்க்கினுந் திண்டியே வேலை'—நன்றாய்க் கவனித் துக் கேள் என்ன சொல்கிறதென்று. அக் குரல் என்ன இனிப்பா யிருக்கிறது !—

வச. [கேட்டுச் சொல்கிறான்] " யாருடைய படம் அது ?—வீணா கக் கோபித்துக் கொள்ளாதே—நீ மன்மதனை எழுதினால் அந்த மன்மதனுக் கேற்ற ரதிதேவியை எழுதினேன் "— ஐயோ ! இதற் கர்த்த மென்ன ?

வ. ஓ ! யாரோ ஒரு பெண்மணி தன் காதலன் படத்தை வரைந்து தன் தோழியிடம் அது காமன் படமெனக் காண் பித்திருக்கவேண்டும். அத்தோழி உண்மை யறிந்து இவள்

மறைத்ததை வெளிப்படுத்தும்பொருட்டு அவள் உருவி னேயே ரதிதேவியென எழுதி யிருக்கவேண்டும்.

வச. ஆமாம், அப்படித்தா னிருக்கவேண்டும்.

வ. பேசா திரு, மறுபடியும் பேசுகிறதைக் கேள்.

வச. [உற்று கேட்டுச் சொல்கிறன்.] "நீ வெட்கபபடுவானேன்? உன்னை யொத்த பேரழகுடையாள் மனம அரசரை நாடி யது ஓர் ஆசசரியமோ?"

வ. சரிதான், சரிதான்.

வச. உங்களுக்குத்தான் தெரியுமென் றெண்ணிவிடாதீாகள். இது பேசி யாகட்டும்; நான எல்லாம் சொல்லுகிறேன்; பலகையி லெழுதபபட்டிருக்கும் பெண மிக ரூபவதியா யிருக்கவேண்டும்; சநதேகமிலலை, அது யாரென் றெனககுத் தெரியும்!—

வ. சமுத்திரததி லகப்படதுபோல கனவு கண்டனேயே அப் பெண்ணோ?

வச. கனவோ நினைவோ கொஞ்சம் பொறும்.

வ. ஆமாம, இபபொழுது கேள.

வச. சரிதான், கேட்டீரோ இபபொழுது சொன்னதை?— "இவைகளை எடுததுவிடு, இவைகளால் என தாபம் தணி யுமோ?"

வ. தெரிகிறது.

வச. அடடே! என்ன பேசுகிறது! என்ன பேசுகிறது!—எல் லாம் அப்புறம விளங்கச் சொலகிறேன்.

வ கெட்டிக்காரன்தான்,—இபபொழுது கேள்.

வச. ஓகோ! அடடா! பாட் டல்லவோ பாடுகிறது!

வ. என்ன பாடுகிறது? உற்றுக் கேள்.

வச. எனக் கம்மாதிரி பாட வராது நேராகச் சொல்கிறேன்: "நான் பெறுதற் கசாத்தியமான புருஷன்மீது காதல் கொண்டுவிட்டேன். இதனால நான் ஒரு பயனும் அடை

யப் போகிறதில்லை; என் காதலையோ என்றால் அடக் முடியவில்லை; அவா என்னைக் கண்ணெடுத்தும் பார்க்கப் போகிறதில்லை. நான் இறப்பதே நலம்"—இதற் கென்ன அர்த்தம்?

வ. பருவம வாய்ந்த பெண்ணொருத்தி தான் காதல்கொண்ட புருஷன் தன்மீது தவ்வாறு காதல்கொள்வானோ எனச சந்தேகித்து உயிா துறக்க நிச்சயித்துக் கூறியபடியாம.

வச. [நகைத்து] ஹா! ஹா! ஹா! இப்படித்திரியாக ஒளித்துக் கூறுவானேன்? "அப்பெண்மணி நான் அவளமீது காதல் கொள்வேனோ என்னவோ என்று கூறுகிறாள" என்று சொலவது தானே நீா? உம்மை யன்றி வேறெவர் மன்மத னுக் கிணையாகச சித்திரிக்கப்பட்டிருக்கக்கூடும்?

[கைகொட்டி நகைக்கிறான்.]

வ. என்ன மூடனா யிருக்கிறாய, வசந்தகா! உன் அட்டகாசத் தைக் கேட்டு அந்தப் பட்சி ஓடிப்போய் விட்டதே. அதோ பாா!

வச. ஆம், ஐயோ! ஓடிப்போய்விட்டது! நான் பின் தொடர் வதில பிரயோஜன மில்லை.—அரசே, அந்தப பெண் யாரா யிருக்கலாமென்று நினைக்கிறீா?

வ. யாராயிருந்தபோதிலும் குரூரமான மாரனையயும் ஓரகத்திற் கஞ்சி, தையலாள் தன தோழியுடன் தன் மனத்தைத் தெரிவித்திருக்கிறாள; சொன்னது சொல்லு மிப்புள் அதைக் கூறியது நமது செவி யின்புற.

வச. அரசே, தேவி யினனும் வரவில்லை, வருமளவும் இபபொழு தில இச சிலையின் மீது சற் றுட்கார்ந் திளைப்பாறுவோம். என்ன குளிாசசியாய் இக் காற்று வீசுகிறது! அப்பா!—

வ. அப்படியே செய்வோம. [உட்காருகிறார்கள்.]

வச. அடடா! அதென்ன அது? ஐயோ! அந்த மைனாவின் கூடு போலிருக்கிறது!—அந்தக் குரங்கு இதை உடைத்து வெளியே விட்டிருக்கவேண்டும் குருவியை—

வ. அதென்ன பார் அங்கு.

வச. இதென்ன விது? அடடா! படம்! படம்!—அரசே நம்முடைய அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்!

வ கொடு, இப்படி, பார்க்கலாம் என்ன எழுதி யிருக்கிற தென்று.

வச. நான் அப்பொழுதே சொல்லவில்லையா? உம்மையன்றி வேறெவரை மன்மதனாக எழுதி யிருக்கக்கூடும்?—ஹா! அரசே, அப்பொழுதே நினைத்தேன்! ஆ! இப்பொழு தென்ன சொல்கிறீர் பார்ப்போம்! நான் சமுத்திரக் கரை யிற்கண்ட பெண்மணியின் உருவே இங்கு எழுதப்பட் டிருக்கிறது! சந்தேக மில்லை. இப்பொழுது நான் உம்மை ஏளனம் செய்யவேண்டுமா இல்லையா?

வ. கொடு இப்படி பார்ப்போம்.

வச. கொஞ்சம் பொறும்.—இதைச் சும்மா கொடுத்து விட லாமா?—முதலில் 'நான் முன்பு உன்னை ஏளனம் செய்த தெல்லாம் தவறு' என்று ஒப்புக்கொள்ளும்—இல்லா விட்டால் இதைக் கொடேன்.

வ. அப்படியே ஆகட்டும், கொடு.

வச. உம்!—இக் கட்டழகியை உமக்குச் சும்மா கொடுத்து விடலாமா? எனக் கென்ன தருகிறீர்?

வ. இதோ. [ஹாரம் ஒன்றைக் கொடுத்து, சித்திரப் பலகை யைப் பிடுங்கிக் கொள்கிறான்.]

ஆ!—நண்பா—

வச. என்ன?—நண்பாவுடன் நின்றுவிட்டது!—ஓகோ! கண்ணை எடுக்கமாட்டீர் போலும்! நான் போவதா ஆனால்?—

வ. தோழா, என் மனமாம் தாமரைத் தடாகத்தைக் கண்ட வுடன் கலக்க வல்ல, படைத்தோனையும் பதைப்புறச் செய்யும், மதியை வெல்லும் வதனமுடைய மாது இவ ளாரோ?—

சுசங்கதையுடன் ரத்னுவளி ஒருபுறம் வருகிருள்.

சு. இனி அப் பட்சியைப் பிடிக்க முயலுவதில் பயனில்லை. நாம் போய் படத்தையாவது எடுத்துக்கொள்வோம்.

ர. ஆம், ஆம்! அது தேவியின் கையிற் படப்போகிறது!

வச. [அரசனை நோக்கி] இப் பெண்மணி அரண்மனையில் தானிருக்கவேண்டும். ஆயினும் யாரென்று நான் அறிகிலேன்.

சு. ஹா! வசந்தகன் குரல்!—நில்—மஹாராஜாவும் அங்கிருக்கிறா—நாம் இச்செடி மறைவிலிருந்து அவர்கள் என்ன பேசிக்கொள்கிருர்கள் கேட்டறிவோம்.

வ. தோழா, இப் பதுமையனையாளைப் படைத்தபொழுது மறையவனும் மனம் குலைந்திருக்கவேண்டும், இயம்பொணு இவ் வெழிலைக் கண்டு! தன் வல்லமையைக் குறித்துத் தானே வியப்புற்றிருக்கவேண்டும். இவள் முகமதைக் கண்டு மதியென மயங்கினனே? அம் மயக்கம் தீரும்பொருட்டு வேலனைய இவ் விழிகளையும், பவழமெனும் இவ் விதழையும் படைத்தனனே?—

சு. சாகரிகா, கேட்டனையா? உன் தவம் நிறைவேறியது! உன் காதலர் உன்னைப் புகழ்கிருர், கேள்.

ர. சுசங்கதா, என்னை ஏளனம் பண்ணுகிருயோ?

சு. ஆமாம், இனி உன்னை நான் ஏளனம் பண்ணலாமா? மஹாராஜாவின் பத்தினியாய் விட்டனையே! கண்ணைப்பார்!—உம்!

ர. பேசாதிரு, அவர்கள் பேசுவதைக் கேட்போம்.

வச. ஏன் அவள் தலை குனிந்திருக்கிருள்?

வ. அப் பறவை கூறியதை மறந்தனையோ?

சு. பார்த்தனையா? நான் அப்பொழுதே சொல்லவில்லையா? அந்த மைனு நாம் பேசியதை யெல்லாம் கூறிவிட்டது.

வச. சரி! நானன்றைத்தினம் வாணித்தபொழுது அப்படிப் பட்ட பெண் இவ்வுலகி லிருக்கமாட்டாள் என்று கூறினீரே, இப்பொழுதென்ன சொல்கிறீர்? உமக் கிசைந்த பெண்தானு?

ர. [தனக்குள்] ஆ! என் காதலர் என்ன விடை அளிக்கிறாரோ, என்னுயிர் அவர் வாயில் இருக்கிறது!

வ. தோழா, எனக்கிசைந்த பெண்ணா என்று கேட்டனை? நானிப்பொழுது யோசிப்பதெல்லாம இவ வணங்கிற்கு நான் ஏற்றவனா என்று யோசிக்கிறேன்.

சு. கேட்டனையா உன் காதலர் உன்னை புகழ்வதை?

ர. நீதான் கேள்! படத்தை எழுதிய திறத்தைப் புகழ்கிறார்.

வச. அரசே, இன்றைத்தினமென்ன உமது புத்தி மழுங்கி இருககிறது! இன்னும் படவில்லையா உமது புத்தியில பாவையின் பககலில எழுதபபட்ட அவள் காதலன் உருவம் உம்முடையதே என்பது?

வ. ஆம், என்னையே எழுதியிருக்கிறாள். ஆயினும் என்மீதுள்ள காதலால என் னெழிலை அதிகபபடுத்தி எழுதியிருக்கிறாள்.— என்மீது காதல் கொண்டிருக்கிறாள் என்பதற் கையமில்லை. இதோ பார், இதை எழுதும் பொழும் அவள் கண்ணீா இப் பலகையினமீது வீழ்ந்திருக்கிறது.

ர. [தனக்குள்] மனமே, அதைரியபபடாதே! உன்நாதா உன் மீது தானும் காதலகொண்டிருககிறா.

சு. மஹாராணி, மாஹாராஜாவிடம் போகிறதுதானே இனி! இனிமே லென்னதடை?

ர. சுசங்கதா, நீ பேசாம லிருககமாட்டாய் நீ!

சு. வாசவதத்தையின் கோபத்தை இபபொழுதே கறறுக் கொள்ளுகிறாயா?

வச. இதென்ன இங்கு தாமரை இலைக ளெலலாம் இருக்கின்றன?

வ தன் தாபம் தணியும் பொருட்டு இத்தாமரை இலைகளைத் தன் தனத்திடைச் சோத்திருக்கவேண்டும்.

இழையெனும் பிரிவுடை யிருத னததிடைக
குழைப்பட வமைந்தன கோதி]ல ம்புத்

தழைதரு விடமெலாந் தவறு வெளியதா
மழலினிற் பட்டதோ வரிவை மீதபோ
வென வியப்புறு தென் மனம்.

வச. இதோ பாரும், இவை கட்டிய தாமரை நாளம்.

வ. [தாமரை நாளத்தை வாங்கித் தன் மார்பிற் சேர்த்து] நாளமே! என்னிதயத்தையும் குளிர்ச்சி பெறச் செய்யாயோ? ஐயோ! ஒரிழையும் பிரிக்கொணு விரு பயோதரத்திடை பாரிக்கப் படவில்லையென வாடினையோ? வாடினையோ? வாடினையோ?

சு. இனி நாம் சும்மா யிருக்கலாகாது. மஹாராஜா மிகவும் வருந்துகிருர் விரக தாபத்தால.—சாகரிகா, நீ நாடி வந்த பொருள் அதோ இருக்கிறது, கைக்கொள.

ர. நான் என்ன நாடி வந்தேன்?

சு. என்ன கோபம்?—அந்த படம்—வேறென்ன இருக்கப் போகிறது;—அதோ எடுத்துக்கொள்.

ர. நீ சொலவ தொனறும் எனக்குப புலப்படவிலலை. நான் போகிறேன. [போக முயல்கிருள்.]

சு. என்ன கோப மடி யம்மா! சறறு பொறு—பேசாதே! நான் போய கொண்டு வருகிறேன்.

ர. நீதான போய்க கொண்டுவா!

[சுசங்கதை அரசன் முன் வருகிருள்.]

வச. அரசே, படத்தை ஒளித்து வைத்துக்கொள்ளும். தேவி யின் தோழி வருகிருள்.

சு. ஜெயவிஜயீபவ!

வ. வாராய், சுசங்கதா, என்ன விசேஷம? நானிங்கிருப்பது உனக்கெப்படித் தெரிந்தது?

சு. அதுவும் அறிவேன், தாங்கள் ஆடையில் ஒளித்திருக்கும் படத்தையும் அறிவேன். நான் போய்த் தேவியிடம் கூறு கிறேன்—

வச. ஐ ஐயோ! குடி கெட்டது!—இவள் கூறிவிடுவாள்! எதாவது கொடுத்து சாந்தப்படுத்தும்.

வ. சுசங்கதா, சற்றுபொறு-இதோ இந்த ஆபரணத்தைப் பெற்றுக்கொள் [சுசங்கதை வாங்கிக்கொள்கிறாள்] இதிலொன்றுமில்லை, ஒரு வேடிக்கை! தேவியிடம் கூறாதே இதை.

சு. மஹாராஜா, மன்னிக்கவேண்டுமென்னை; என்னைக் குறித்து கவலைபடவேண்டாம்; நான விளையாடினேன்; எனக்கு இவ் வாபரணம் வேண்டாம். தேவி கொடுத்தது அதிகமாயுளது. உண்மையைக் கூறுமிடத்து என்னுயிர்த்தோழியாகிய சாகரிகை, நான் அவள படத்தை எழுதியதற்காக என்மீது மிகவும் கோபித்து நிற்கிறாள், அதோ; தாம் நேரிலவளிடம போய் அவள் கோபத்தைத தணிப்பீராயின் நலமாம்.

வ. [திடீரென் றெழுந்து] எங்கே? எங்கே உன் தோழி?

வச. அரசே, உம்முடைய சந்தோஷத்தில இப படத்தை எங்கேயாவது போடடபோகிறீர், கொடும் அதை இப்படி.

[அதை வாங்கிக் கொள்கிறான்.]

சு. அதோ நிற்கிறாள்.

வ. [ரதனாவளியைப் பார்த்து]

விண்ணாருங் கோமகனும் வியப்புறுமிவ வெழிலின்மிக்காள்
மணணாரு மெமமன்னன மகிழ்ந்தளித்த மகளேயோ,
புணணாரு மெனனிதயம் பொலிவெய்த வந்தென்முன்,
கண்ணாருங் காதலியாய்க் கண்பட்டாள்! கண்பட்டாளே!

[சமீபமாய்ச செல்கிறான்.]

ர. சுசங்கதா! [போய்க்கொண்டே]

இதுதானோ நீ படம் கொண்டு வரப்போனது?

வ. கண்ணினிய என் காதலியே!—உன் தோழியின்மீது கடுகடுத்து ஏன் பார்க்கிறாய்?—கடுகடுக்க முயன்றாலும் கனிவெய்து முன் கரு விழிகள்! கண்ணே! ஏன் முகத்தைத் திருப்பிக்கொள்ளுகிறாய்? கடுத்தாயினும் என்னைப்பார்! நீ போவையாயின் உன் பிரிவை நான் ஆற்றுவனோ?

சு. மஹாராஜா, அவள் மிகவும் கோபித்திருக்கிறாள். அவள் கையை பிடித்துச் சமாதானம் செய்யும்.

ர. உனக்கு வேறு வேலை இல்லையா ?

வ. இதோ ! அப்படியே செய்கிறேன்.

[ரதனாவளியின் கரததை பிடித்து கொளகிறான்.]

ர சுசங்கதா, மஹாராஜாவை யேன் தொந்தரவு செய்கிறாய் நீ ? அந்தப்புரம போக விரும்பும் அவரை யேன் இங்கிருக்கச் செய்கிறாய் ?

வ. ஓ ! என் கணணின் கருமணியே ! உன்னைக கண்டபின் வேறொரு பெண்ணின் மீது போமோ என் மனம் ? இப்படித திரும்பிப பாராயோ என்னை ஒரு முறை ?

சு. என்ன சாகரிகா! மஹாராஜாவே உன்னைக் கைபிடித்து இப்படி வேணடுமபொழுது நீ மன மிளகா திருக்கிறாயே ! சற்று முன்பாக நீ வருந்திய தென்ன ? இபபொழுது—

ர. நீ பேசா திருககமாட்டாய் ?

வ. கண்ணே, என்மீது நீ கோபிக்கலாமோ ? நான் என்ன தவறு செய்தேன் ?

வச. ஐயோ ! அம்மா ! என்ன கோபம் ! என்ன கோபம் ! எல்லாம் மேலுக்குத்தானே !—சுசங்கதா, நாம் இங்கிருப்பது தடையா யிருக்கிறதுபோலும், வா, நாம போவோம். நீயும் கோபித்துக் கொள்வாயாம், நானுன்னை வேண்டு வேனும்.

ர. உம் !

வச. உம் !—ஐயோ ! வாசவதத்தை வந்தாள் போலிருக்கிறதே !

[அரசன் தான் பிடித்திருந்த ரத்னாவளியின் கரத்தைத் திடீரென்று விட்டுவிடுகிறான். ரத்னாவளியும சுசங்கதையும் கொடி வீட்டில் மறைந்து கொள்கிறார்கள்.]

வ. தோழா, எங்கே வாசவதத்தை ?

வச. வாசவதத்தை ஏது ? கோபத்தில வாசவதத்தையே சாகரிகை என்று கூறினேன் !

வி. மூடா! கைக் கெட்டிய கனியை கைவிடச் செய்தனையே!

வச. சுசங்கதா, வாருங்கள் வெளியே; வாசவதத்தை யிங்கில்லை!

ரத்னாவளியும் சுசங்கதையும கொடிவீட்டினின்றும் வருகிறார்கள்.

சு. ஒருவேளை ராணி வந்தாலும் வருவார்கள். நாம் போய்ப் பார்க்கலாம். [வசந்தகனுக்கு சைகை செய்கிறாள்.]

வச. ஆமாம, வா. [வசந்தகனும், சுசங்கதையும் போகிறார்கள்.]

ர. சுசங்கதா, என்னைத் தனியாக விட்டுப் போகிறாயே!

சு. [சற்று நின்று] ஐயோ பாபம்! உலகாளும் மன்னன் உன் பக்கத்தி லிருக்க உனக்குப் பயமென்ன?

[இருவரும் போய்விடுகிறார்கள்]

ர. ஐயோ! போகவே போயினளே!

வ. என்னுயிரினுக்குயிரான அமுதே! இனியேனும் நாணம் விடுத் தென்னை ஒரு முறை நோக்காயோ? உன் மீதுள்ள காதலால் கொதிப் பெய்திய என்னிதயம தண்ணியதாக உன் கனிவாய் திறந்து ஒரு வார்த்தை கழறாயோ?—

ர. அக் காதல—என்றும் இருக்குமென்பது—என்ன நிச்சயம்?

வ. அலை கடல நிலை தவறினாலும், அந்தணர் அறம பிறழ்ந்தாலும், தினகரன் தெற்குதித்தாலும், திக்குகள் மாறினாலும, காலமது நின்றிட்டாலும, கலையது குன்றிட்டாலும், விலையிலா என்னுயிரே வீய்ந்திட்டாலும், நான் குன்றுவனோ உன்மேல காதல்?

ர. அரசே! வாசவதத்தை வரப்போகிறாகள்.—

வ. வந்தாலும் பெரிதல்ல! நீ என்னை மணம் புரிவதாக ஒரு வார்த்தை கூறு, போதும்

ர. ஐயோ!—பிராணநாதா!—ராணி வருகிறார்கள் விடுமென்னை—

வ. என்னை மணம் புரிவதாகக் கூறு, விடுகிறேன்.

ர. அதோ வருகிறார்கள்!—ஆகட்டும்.

[அரசன் கரத்தினின்றும் விடுவித்துக்கொண்டு ஒரு புறம் சென்று மறைந்து கொள்ளுகிறாள்.]

வாசவதத்தை வருகிறாள்.

வா. பிராணநாதா! நீர் என்ன செய்கிறீரிங்கு?

வ. உன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன்; இத்தனை நேரமா நீ வர?

வா. கேட்பானேன்! அதிருக்கட்டும் — இங்கே என் தோழியின் குரல் கேட்டது—வேறு யாராவது வந்தார்களா இங்கே?

வ. யாரும் வரவில்லையே — உட்காரிப்படி, ஏன் நிற்கிறாய்?

வா. கையில தாமரை இலை என்ன?

வ. நீ வராததினால் என தாபம் மதிகரிக்க, அது தணியும் பொருட்டு இவ் விலையைக் கண்ணில் ஒற்றிக்கொண்டிருந்தேன்.

வா. ஐயோ பாபம்! என்ன விந்தை! தாபம் தணியத் தாமரை இலையைக் கண்ணில்தான் ஒற்றிக்கொள்வார்களோ? யாரிடம் கூறுகிறீர்?

வ. ஐயோ! சொன்னால் என்னை நம்பமாட்டாய் நீ, இதோ பார் காண்பிக்கிறேன். [இலைகளால் அவள் கண்ணை மூடுகிறான்.]

வா. போதும், போதும், எடுத்து விடும்.

வ. கொஞ்சம் பொறு, என்ன குளிர்ச்சியா யிருக்கிறது பார்— உன் கோபம் கொஞ்சம் தணியட்டும்!

[இச்சமயம் ரத்னாவளி வெளி வந்து விரைந்து போய் விடுகிறாள்.]

வா. யார் இப்படிப் போனது? யாரோ போன சப்தம் கேட்டதே!

வ. உனக் கென்ன பயித்தியமா? ஒருவரு மில்லை, உட்கார்.

வா. நான் போய்ப் பார்த்து வருகிறேன்; எனக் கென்னவோ சந்தேகமா யிருக்கிறது.

வ. வாசவதத்தை, இது நியாயமா உனக்கு? உனக்காக நான் இத்தனை நேரம் உன் வரவை எதிர்பார்த்து வருந்தி இருப்பது, நீ இத்தனை காலம் பொறுத்து வந்தது மல்லாமல் உடனே திரும்பிப் போய்விடுவதா? என் கண்ணல்ல உட்காரிப்படி.

காஞ்சனை வருகிருள் ; சற்று பின்பாக வசந்தகன் வருகிருன்.

வா. காஞ்சனு, நீயா சற்று முன்பாக இப்படி போனது ?

கா. இல்லையே, அம்மணி

வ. ஐயோ ! என்ன சந்தேகப் பிராணி !

வச. ஓ ! தேவியவர்கள் நானும் சுசங்கதையும் இப்படிப் போ ேனேமே அதைச சொல்கிருர்கள்போ லிருக்கிறது.

வ அதையும் நான் கவனிக்கவில்லை நா னிருந்த ஞாபகத்தில.

வா. ஏது மஹாராஜாவுக்கு என்மீது அவவளவு பிரீதி வந்தது ?

வ. நீதான் சந்தேகப்படுகிருய் என் மீது வீணில—

வா. இல்லை பிராணநாதா, வாரும நாம் போய் உமது மல்லிகைச் செடியைப் பாாப்போம்.

வ. [ஒரு புறமாக வசந்தகனிடம்] படத்தை மறைத்துவை !

வா. பிராணநாதா மலலிகை மலர்ந்ததா ?

வ. மலர்ந்திருக்கவேண்டும் ; நாமிருவரும் ஒன்ருய்ப் போய் அதை பார்த்து மகிழ வேண்டுமென்று உன் வரவை எதிர் பார்த்திருந்தேன், போவோம் வா.

வா. வேண்டாம் இங்கேயே உட்காருவோம். உமது முகத்தைப் பார்க்கும் பொழுதே அது மலர்ந்ததென்று தெரிகிறது. அதைப் பார்ப்பானேன் ? உம்மைப் பார்த்ததே போதும் எனக்கு ! நான் தோற்கப்பட்டதாக ஒப்புக் கொள்ளு கிறேன் ; போதுமா ?

வ போதும்.

வச. ஆ ! சந்தோஷம் ! சந்தோஷம் ! ஜெயித்தீர் மஹாராஜா ! ஜெயித்தீர் ! [சந்தோஷததால் குதிக்கிருன். அவன் மறைத்து வைததிருந்த படம் கீழே விழுகிறது. அதை உடனே காஞ்சனை எடுத்துக் கொள்கிருள் ]

கா. தேவி ! இதைப் பார்த்தீரா யாருடைய படமென்று ? என்னை நம்பமாட்டே னென்றீரே ! இப்பொழு தென்ன சொல்லுகிறீர் ?

வா சரிதான் !—மஹாராஜா !—

வ. தேவி,—

வா. தேவி !—வாய் கூசாமல தேவி என் றென்னை அழைக்கி றீரே !— இதென்ன இது ?

வ. [ஒருபுறம வசந்தகனிடம்] நான் என்ன சொல்வது ?

வச. அம்மணி ! நீங்கள கோபித்துககொள்ளக்கூடாது !—சமா சாரம் என்னவென்றால்—சற்று முனபாக நாங்களிருவரும் பேசிககொண் டிருநதபொழுது மஹாராஜாவைபபோல சித திர மெழுதுவது கடினமெனக கூறினேன. அபபொழுது மஹாராஜா தன் படததைத தானே எழுதினார்—

வ. வசந்தகன கூறுவ துணமையே.

வா. சரிதான் !—இ ந த ப பெண ?—வசநதகனுடைய புத்தி சாதுாயமோ ?

வ. கண்ணே, கோபிததுககொள்ளாதே ! இது மனத்தால் நிர் மாணஞ் செய்யபபட்ட மாது. இப்படிபபட்டவள் ஒருத் தியு மிலலை.

வச. ஆமாம், என் பூணு நூலமே லாணை !

கா. அதை நம்பாதீா, அம்மணி !

வா இவ வாணையையா நம்புவேன் ? மஹாராஜாவையே நான் நம்பவிலலையே!—மஹாராஜா, எனனை மனனியும ! இதைப பாாத்தது முதல எனக்குத தலை நோயுண்டாயிருககிறது ! நான வருகிறேன —நீா யாருக்காக காததுககொணடிருந் தீரோ அவளுககாக இனனும காததுக் கொண்டிரும.

வ. கண்ணே, உனக் கினனும் நான என்ன சொலலபபோகி றேன் ? நான் ஒரு குறறமும் செய்தவனலல ! அபபடி யிருக்க உன்னை நான் எதறகென்று மனனிபபு கேடபது ? சும்மா இருந்தாலும் நீ கோபம் தணியப போகிறதிலலை. நான் என்ன செய்வது ?

வா. அந்தப படத்தைப பாரததுககொண்டிருப்பது!—நான வருகிறேன். என் தலை நோகிறது! என் மனமும் நோகிறது!
[காஞ்சனையுடன் போகிருள்.]

வச இப்பொழு தென்ன செய்வது நான்?

வ. எப்படியும் போய் ராணியின் கோபததைத தணிக்கவேண்டும் நான். எல்லாம உன் மூடத்தனததால வநதது!
[போகிருன்.]

வச. இதென்ன தொந்தரவாய் முடிநதது! இபபொழுது யாரிடம் போவது நான் என துயா தணிய?

பாப்ரவ்யனும, டாமரவ்யனும வருகிருாகள்.

பா. என் தமபி யிருககிருனே—

வச உனனை யாரையா வரசசொன்ன திங்கே?

பா. என் தமபி இலலேங்கோ? அவன் எலலாம கறறுககொண்டிருககிருன். அவனுக்கு நாலு பெயரும நன்ருகத தெரியும்.—சொலலடா தம்பி.

டா. உம்—உம—உம—மாமா!

பா. இலலையடா தமபி—லாமா.

வச இபபடி வாருஙகளையா இரணடு பெயரும!
[இருவரையும காதைப பிடிதது இழுததுக்கொணடு போகிருன.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி.

இடம்—அந்தபபுரம. காலம்—சாயஙகாலம்.

வாசவதத்தை சித்திரப் பலகையுடன் வருகிருள்

வா. இதில சந்தேகமிலலை! ஏதோ சூது நடநதிருககவேணடும! கைபபுண்ணுககுக கணணுடி வேண்டுமா? இதோ பிரததியட்சமாய் இதுவே ரூபிககிறது! வேறெனன அத்தாட்சி வேண்டும்? சீ! நாம இவ்வளவு அக்கிரமதைப யிருநதும

ஏமாந்து போனேமே! ஆயினும் கொஞ்சம் சந்தேக மிருக்கிறது.—சாகரிகையும் மஹாராஜாவும் நேரில் சந்தித்திருக்கக்கூடுமா? அல்லது வசந்தகன் எழுதியதோ இது? வசந்தகனுக்கு இவ்வளவு யுக்தியும் கைப பழக்கமும் எங்கிருந்து வந்தது? இதனுண்மையை அவர்களிருவரையும் ஒவ்வொருவராய் வரவழைத்து விசாரித் தறிய வேண்டும்! இதோ வருகிறாள் சாகரிகை,—

ரத்னுவளி வருகிறாள்.

ர. தேவி, நமஸ்காரம்; என்னை அழைத்தீர்களாமே விரைவில வருமபடி?

வா ஆமாம், உடகாா, உன்னுடன் சற்று சாவகாசமாய்ப பேச வேண்டும்.—இதுவரையில எங்கிருந்தாய் நீ? என்ன செய்து கொண்டிருந்தாய?

ர. நான் பறந்துபபோன அந்தச சாரிகையைத தேடிக் கொண்டிருந்தேன.

வா. அகபபட்டதா அது?

ர. அகபபட்டது

வா. சாகரிகா, உனக்குச் சீககிரம விவாகம செய்துவைக்கலாமென்றெண்ணி யிருக்கிறேன, என்ன சொலகிறாய்தற்கு?

ர. அம்மா, இப்பொழு தெனக்கு விவாக மென்னத்திற்கு?

வா. இல்லை, உனக்கோ தக்க பருவம் வந்து விட்டது. இனி நீ தனியா யிருப்பது நியாய மல்ல.

ர. அம்மா என்னை மன்னிக்கவேண்டும். நான் ஒரு விரதம் பூண்டிருக்கிறேன். அவ விரதம முடிவு பெறும வரையில் நான் மணம் புரிய லாகாது—

வா. இருந்தாலு மென்ன? இப்பொழுதே தக்க கணவனைச் சம்பாதித்து வைத்தால, விரதம முடிந்தவுடன் விவாகஞ் செய்து கொள்ளலாம்.— சாகரிகா, உனக கெப்படிப் பட்டவராய் இருக்க வேண்டும் புருஷன்?

அம்மா எனக் கொன்றும் தெரியாது, அம்மணி.

வா. ஆம், உனக் கொன்றும் தெரியாது.—இருந்த போதிலும் இப் படத்தை பார்; இதிலிருக்கும் புருஷன் உன் மனத்துக் கேற்றவரா யிருக்கிறாரா?

ர. அம்மா, எனக்கு விவாகமே வேண்டா மென்றேனே இப் பொழுது!

வா இல்லை, இப் புருஷனைப் பார்? எப்படியிருக்கிறார்?

ர. தேவி, எனக்கு நாணமா யிருக்கிறது பார்க்க தென்றால்!

வா. இங் கொருவரு மில்லை, பார் அழகா யிருக்கிறாரா?

ர. அம்மா, இவ்வளவு வடி வழகுள்ள ஆடவன இவ்வுலகில் இருக்கிறாரோ?

வா. ஐயோ பாபம்! ஏனடி, இது யார் என்று தெரியாது உனக்கு?

ர. தெரியாது அம்மா!

வா. உன கண்ணால நீ பார்த்ததே யில்லையே?

ர. இல்லையே, அம்மணி!

வா. ஒரு குற்ற மறியாதவள், என் னென்ன கற்றுக்கொண்டாய்! போனால் போகிறது —இந்த உருவம யாருடையது?

ர. எனக்குத தெரிய வில்லை, அம்மணி.

வா. ஆஹா! என்ன சூது!—நன்றாய்ப் பார்!

ர. உங்களுடையது போலிருக்கிறது, அம்மணி.—

வா. ஆ! ஆ! சாகரிகா, புளுகினாலும் இப்படி யலலவோ புளுக வேண்டும்! உன திருட்டுத்தனத்தை யெல்லாம் அறிந்து கொண்டேன். உண்மையைக் கூறுகிறாயா என்ன இப பொழுது? இது யார் எழுதினது? மஹாராஜாவை நீ நேரிற் கண்டு பேசியது உண்டா, இல்லையா?

ர. நான் ஒரு பாபமு மறியேனே, அம்மணி! ஐ ஐயோ! இது என்ன அபராதம்!

வா. இந்தப் பலகையில் உன் உருவம் எப்படி வந்தது? இது யார் எழுதியது? சொல்லமாட்டாய் நீ?

ர. தேவி, எனக் கொன்றும் தெரியாதே, நான் என்ன சொல்வது?

வா. ஆனால வா இப்படி. நீ உண்மையை வெளியிடும் வரையில உன்னை இவ்வறையை விட்டு வெளியில் விடப்போகிற தில்லை [ஒரு புறமுள்ள அறைக்கு அழைத்துச் சென்று] என்ன? சொலகிறாயா என்ன?

ர. நான் என்ன சொலவது?

வா. சரி, ஆனால் உண்மையை நான் அறியும் வரையில் நீ இங்கே தான் இருக்கவேணடும். [அறையுள் அவளைப் பூட்டி] எனக்கே வழிவைத்தாயா நீ! இருக்கட்டும்—எலலாம் இந்த வசந்தகன் வேலை; வரட்டும் அவன்! அவனாலன்றி ஒன்றும நேராந்திராது—

பாப்ரவ்யனும், டாமரவ்யனும வசந்தகனைப் பலவந்தமாய்த தூக்கி வருகினறனா.

வச. தேவி! தேவி! இதென்ன சமாசாரம்?

வா. எலலாம உன சமாசாரந்தான்.—வசந்தகா, இப்பொழுதா வது உண்மையைக கூறு, உன்மீது நான கோபங்கொள்ள விலலை.

வச. அம்மா, இதென்ன ஆச்சரியம்! நான் பொய் பேசுவானேன்? நீங்கள கோபம கொளவானேன? இதென்ன கஷ்டம்?

வா. இதெலலாம் தெரியுமெனக்கு, உனனைக கடைசி முறை கேட்கிறேன். இந்தச் சாகரிகையை மஹாராஜா நேரிற கணடது உண்டா இலலையா?

வச. தேவி, இம்முறை நான உண்மையைக கூறிவிடுகிறேன். என மீது கோபம கொளளவேண்டாம.

வா. ஆம், நீ நலலவனாயிற்றே, சொல.

வச. முதலிலே கொஞ்சம் சந்தேகம் தெளிவித்துக்கொண்டு அப்புறம் உண்மையைச் சொலகிறேன் அம்மணி.

வா. அப்படியே ஆகட்டும.

வச. முதலில இது யார்? சாகரிகையா?

வா. பார்த்தாயா !—ஆரம்பித்தாயே மறுபடியும் ?

வச. இல்லை அம்மணி; கோபித்துக் கொள்ள வேண்டாம். இந்தச் சாகரிகை அன்று கடலில் அகப்பட்ட பெண்ணோ ?

வா. ஆம்.

வச. ஆனால் உங்களுக்குச் சந்தேகமே வேண்டாம், அம்மணி.

வா. என்ன ?

வச. மஹாராஜா பார்க்கவே யில்லை.

வா. உண்மைதானா ?

வச. கேட்பானேன் ? எப்படிப் பார்த்திருப்பார் ? நீங்கள் யோசித்துப் பாருங்கள் ? அது சாத்தியமா ?

வா. ஏன் ?

வச. அந்தப் பெண்ணோ இல்லையே ! கடலில் கண்டதெல்லாம் நீங்கள் முன்பு சொன்னபடியே கனவுதானே ! உண்மையில் அகப்பட்டவா இந்தப் பாப்ரவ்யா !—இந்தப்பெண்ணை, எப்படிப் பார்த்திருப்பார் மஹாராஜா, என்று நான் ஒரு கேள்வி கேட்கிறேன் ?

வா. இவ்வளவு தூரம் நான் கூறியும் பழையபடி ஆரம்பித்தாயல்லவா நீ ! இருக்கட்டும். உன்னிடமிருந்து வருவிக்கும் விதத்தில் வரவழைக்கிறேன்.—பாப்ரவ்யா, அப்படியே வசந்தகனை இந்த அறைக்குள் அடைத்துப் பூட்டிவிடு.

வச. தேவி ! உம் இஷ்டம் ! ஆனால் இன்னொரு விஷயம் மாத்திரம் நான் சொல்ல மறந்து விட்டேன்.

வா. என்ன ? இப்பொழுதாவது சொல் மன்னிக்கிறேன்.

வச. நான் அந்தப் படம் என்னவாக எழுதினேன் என்று யோசனை செய்து பார்த்தேன்,—இப்பொழுது தான் தெரிந்தது !

வா. என்ன ? என்ன ?

வச. நான் அந்தப் பெண்ணைக் கனவில் பார்த்தபொழுது அப்படியே என் மனத்தில் அவ்வுருவம் படிந்திருக்க வேண்

டே. அதன்படியே நான் எழுதியிருக்கவேண்டும். தெரியு துங்களா?

வா. பாப்ரவ்யா! அந்த கதவை மூடு!

[எதிர புறமுள்ள வேறொரு அறையில அவனைத் தள்ளி மூடுகின்றனர்.]

இங்கு ஜாக்கிரதையாகக் காத்திருங்கள்—மஹாராஜாவையே இனி நேரில் கேட்டுப்பார்க்கவேண்டியது தான்.—பத்திரம்; கதவுகளைத் திறந்துவிட்டுப் போகிறீர்கள், பத்திரம்

பா. இல்லை, அம்மணி, நான் தம்பியுடன் இருக்கிறேன்,— அவனுக்கு மந்திரி வேலை—

வா. எல்லாம் அப்புறம் பார்த்துக்கொள்வோம ஜாக்கிரதை! [போகிறாள்.]

ட. அண்ணா! நான மந்திரி அல்லவா?

பா. ஆமாம; சீக்கிரம் பார்ப்பாய் இப்பொழுது பேசாதிரு.

ட. ஆனால்— உடுப்பு—காசு—குடு.

பா. என்ன உடுப்பு?

ட. மந்திரி—உடுப்பு—இது—ஒத்துவாரா?

பா. இது உதவாது அப்புறம் பார்த்துக்கொள்வோம.

ட. இப்பவே தச்சிக்க குடு.

பா. இப்பொழுது எங்கே போவது பொன்னுக்கு?

ட. இல்லியோ? கொஞ்சந்தானே புடிக்கும்—இருவது லச்சந் தானே—புடிக்கும்.

பா. ஓகோ! இருபது லட்சம வேணுமோ? அதெல்லாம் உத வாது அது ரொம்ப அதிகம

ட. இல்லாப்போனா நீ என்ன கொடுப்பே?

பா. நான ஒன்றும் கொடுக்கமாட்டேன். ஆனாலும் பத்து லட்சம போதாதோ உன உடுப்புக்கு?

ட. அது என்னப்பா போதும் அண்ணா?—அங்கிக்கு மாத்ரம் ஒரு பத்து லச்சம வேணுமே!

பா. பத்து லட்சம் ஏன்? மூன்று லட்சம் போதும்—

டா. உம்!—அப்புறம்—ஜலலட்த்துக்கு ஒரு மூணு லச்சம் வேணுமா?

பா. எல்லாம இரண்டு லட்சம போதும்.

டா. தலெ குட்டெக்கி ஒரு ரெண்டு லச்சம் வேணுமா?

பா. எல்லாம இரணடு லடசம போதும.

டா. உம—மீதிக்கெல்லாம ஒரு லச்சம வேணுமா?—எல்லாம் சேத்தா என்ன ஆச்சி? அஞ்சி லச்சம ஆவலெ? லச்சம் தாம் புடிக்குப இண்ணியே!

பா. போடா! உனக கொன்றும கணக்குத தெரியாது எல்லாம் மொத்தம பதது லட்சததுககு மேலேயாகிறது!

டா. எதோ கணககு போட்டு பாருங்கோ.

[அங்கு ராணி வைத்துச சென்ற சித்திரப் பலகையை எடுத்து அதில எழுதி யிருந்த படங்களை அழிததுவிட்டு பலகையை பாப்ரவ்யனிடம கொடுக்கிருன்.]

பா. அடடே தமபி! இதை ஏனடா கலைத்து விட்டாய்? ராணி பாாததால கோபிததுககொள்வாாகளே!

டா. நான் அதுக்கான நண்ணு எழுதி வைச்சூட்ரேன், பயப படாதிங்கோ.

பா. முன்னே எழுது, ராணி வந்து விடபபோகிருர்கள.

டா. [குரூபமாக இரணடு படஙகளை அதில் வரைந்து] அண்ணு, இது நண்ணு இலலே?

பா. நன்ரு யிருக்கிறதடா தம்பி! உனககே மநதிரி வேலே தகும்!

டா. அண்ணு, நானு மந்திரி யாணுககா ஒனககு சேவகன வேலே கொடுப்பேன் அவ்வா?

பா. ஏனடா! நீ மந்திரி, நான் சேவகனே? அது உதவாது நான் அண்ணன, நீ தம்பி யல்ல? அப்படி முடியாது

டா. அப்படி முடியாபபோனுக்கா—நான தம்பி யல்லே, போ— நான் அண்ணன்.

பா. சீ! நான் தான் அண்ணன்—நீதான் தம்பி.

டா. உம—நான் அணணென், நீ தம்பி?

வச. [அறை உள்ளிருந்து] என்ன சண்டை அஙகே?

பா. வாததியாரிடம் போய் கேட்டுப பார்பபோம.

டா. உம்—உம!

பா. ஐயா! நீங்கள் சொல்லுங்கள். எஙகள் இரண்டு பெயரில் யாா அண்ணன், யாா தம்பி?

வச. நான் இங்கிருநதெபபடிச சொலவது? வெளியே வந்து பாாததலலவோ சொலலவேண்டும.

பா வெளியே விட்டால ஓடிபபோகமாட்டீர்களே?

வச. உம—உம!— [அவாகள் கதவைத திறகக, வெளிவந்து] அபபா!—சமாசாரம என்ன?

பா. எஙகளிருவரில யாா அண்ணன, யாா தமபி? நான்தானே அண்ணன?

வச. இதைத தீர்மானிககிறதறகு ஒரு யுகதி சொலலுகிறேன்.—யாா இநத அநதபபுரததைச சுறறி ஒரு தரம சீககிரம் ஓடி வருகிறீாகளோ அவன தான் அண்ணன்!

இருவரும். உம்!—உம்!—

வச. நீ இபபடி ஓடு!—நீ இபபடி ஓடு!

[எதிாப்புறமாய் இருவாகளும் ஓடுகிருர்கள்.]

வத்சராஜன், விரைநது வருகிருன்.

வ. வசந்தகா! நீயா இஙகிருககிருய்?—தேவி சாகரிகையை ஒரு அறையில அடைத்திருககிருளாமே, எந்த அறையில் தெரியுமா?

வச. ஓ! என்னை இத்தனை நேரம் இந்த அறையில அடைத்து வைத்திருந்தாாகள! இபபொழுதுதான் தப்பி வந்தேன்! ஒரு வேளை எதிர் அறையில சாகரிகை இருககலாம்.—பூட்டப்பட் டிருக்கிறதே! திறவுகோ லேது?

வ. இதோ மெல்ல சுசங்கதையைக் கொண்டு வாசவதத்தை யறியாதபடி எடுத்துக்கொண்டு வந்தேன்—திறந்து பார்ப் போம் சீக்கிரம். வாசவதத்தை வரப்போகிறுள்.

[கதவைத் திறக்க ரத்னுவளி வெளியே வருகிறுள்.]

ர. பிராணநாதா!

வ. என் கண்ணே, எத்தனை நாழி அடைபட்டிருந்தாய்?

ர. ஐயோ! அப்புறம் சொலகிறேன். ராணி வரபபோகிறுாகள. நமமிருவரையுமு ஒன்றுய்ப் பாாத்தால தொந்தரவு.

வ. ஆமாம், உண்மையே! வா வெளியிற போவோம்.

வச. நீஙகள் போஙகள நான் அப்புறம் வருகிறேன்.

[வதசராஜனும் ரதனுவளியும் விரைந்து போகின்றனர்.]

டாமரவ்யன் ஓடி வருகிறுன்.

டா. நான்தான் அணணன்!

வச. ஐயோ! கொஞ்சம் முன்பு வராமற் போனுயே!

டா. என்னு?

வச. அதோ உனக்கு முன்பே உன் அண்ணன் வந்துவிட்டானே!

டா. எதோ?

வச. அதோ அந்த அறையில! போய்ப் பாா்.

டா. அபபடியா? [அறைக்குள் போகிறுன்.]

வச. [அறையைத தாளிட்டு] ஒனறும் பேசாதே, பத்திரம்!

பாப்ரவ்யன் ஓடி வருகிறுன்.

பா. நான்தான் அண்ணன்!

வச. நீதான் தம்பி.—அதோ உன் அண்ணன் உனக்கு முன்னமே வந்து உள்ளே தூங்குகிறுன், போய்ப் பார்!

பா. ஏ! பார்க்கலாம! [எதிர்ப்புறமுள்ள அறைக்குட் செல்ல]

வச. [அந்த அறையையும் தாளிட்டு] ஜாக்கிரதை! வாயைத் திறக் காதே!— பத்திரம்!

பா [உள்ளிருந்து] தம்பி!

டா. [உள்ளிருந்து] அண்ணா!

பா. என் கதவைத் திறந்துவிடமாட்டாயா?

டா. நீ என் கதவைத் தெறந்துடமாட்டியா?

வச. பத்திரம்! கூச்சலிட்டால ராணி கோபித்துக் கொள்வாாகள்; அதோ வருகிறார்கள், பத்திரம்! [விரைந்து போகிறான்.]

மறுபடியும் வாசவதத்தை வருகிறாள்.

வா. எங்கே தேடினும் மஹாராஜாவைக் காணோமே. எங்கே போயிருப்பார்? எப்படியும் சுசங்கதை தேடி அழைத்து வருவாள்.—எங்கே, இவர்க ளிருவரையுங் காணோம்? எங்காவது போயிருப்பார்கள்.—நான் அவவளவு தூரம் சொல்லியும் என்ன பிரயோசனம்?—ஆயினும் அறைகள் மூடப்பட்டுதா னிருக்கின்றன. இனி எபபடி இந்தச் சாகரிகை நமது கையை விட்டுத் தபபுகிறாளோ பாாப்போம்! சுசங்கதையை ஆபரண முதலியவைகளைக் கொடுத்து நமது வசமாக்கிவிட்டோம்—அதோ வருகிறார் மஹாராஜா.—நான் கோபம் கொண்டவளபோலிருக்கவேண்டும்.

வத்சராஜன் மெல்ல வருகிறான்.

வ. வாசவதத்தை, என்னை அழைத்தனையாமே?

வா. நான் அழைக்கவிலலை; நானேன் அழைககிறேன்?

வ. சுசங்கதை கூறினாளே?

வா. ஆனால் அவளிடம் போயக் கேளும.

வ. உத்தரவுபடி. [போக முயல்கிறான்.]

வா. போகிறீரோ?—வாரும் இப்படி! எனன வரவர இபபடியானீா?

வ. வாசவதத்தை, நீ என்ன இபபடி கூறுகிறாய்? நான் எபபொழுதும் ஒரே மாதிரியாகததா னிருக்கிறேன். நீ தான் ஒரு காரணமு மினறி கோபிததுககொண டிருககிறாய என் மீது.

வா. இப்பொழுதும் சொல்லமாட்டீரா நடந்த செய்தி?

வ. நான் என்ன சொல்வது ? ஒன்றும் நடக்க வில்லையே!

வா. அந்தச் சித்திரப பலகையில் எழுதப்பட்ட பெண்ணை நீர் நேரில பாரக்கவே யிலலே ?

வ. ஐயோ! அபபடிப்பட்ட பெண் ணொருத்தி இப் பூமண்டலத்தில இருக்கிருளோ ?

வா. ஒன்றுந் தெரியாது பாபம்! நேரிற் காண்பித்தால இட்சணம் ?

வ. எதோ, காட்டு பார்ப்போம்.

வா. அக் கதவைத் திறந்து பாரும.

வ. இதையா ? [ஒருபுறம் கதவைத திறந்து உள்ளே பாரதது] வாசவதத்தை! உனக கிதுவும் ஒரு விளையாட்டோ ? அன்றைததினம் கடற் கரையில ஏமாறறியதுபோல இன்றும் செயகிருயோ ?

வா. என்ன ?

வ. உள்ளே யாரிருக்கிறது பார், நீதான்.

வா. [உள்ளே பார்தது] ஆ! எங்கே சாகரிகை ? பாபரவ்யா!—இதென்ன ? எங்கே சாகரிகை ?—நீ எபபடி இதனுள் அகப்பட்டாய் ?

பாப்ரவ்யன் வெளியே வருகிருன்.

பா. தம்பி—மந்திரியை—கேட்டால—தெரியும்.

வா. எங்கே அந்த மடயன். ?

பா. அந்த அறையில் இருக்கிருன்.

வா. ஒகோ! வசந்தகனும் தபபினுனபோ லிருக்கிறதே! [மற்ெருரு கதவைத் திறக்கிருள்.]

டாமரவ்யன் வெளியே வருகிருன்.

டா. நான் தான் அணணன்!

வ வாசவதத்தை! இதென்ன விளையாட்டு ?

வா. எனன மதிமோசம் போனேன !—அந்தச் சித்திரப் பலகையையுங் காணேம் !

பா. மந்திரி இடம் இருக்கிறது.

வா. எந்த மந்திரி யிடம்?

பா. இதோ.

வா. இந்தப் பயித்தியத் திடமா? எங்கே அந்தப் பலகை?—

[வத்சராஜன் நகைப்பது கண்டு]

ஆம், பிராணநாதா, இதற்குள்ளாக நகைக்கவேண்டாம் இந்தச் சித்திர பலகையி லிருப்பதற் கென்ன சொல்லு கிறீர்?

வ. வாசவதத்தை! உனக் கென்ன பயித்தியம் பிடித்திருக் கிறதோ!—இதென்ன இது?

வா. ஆ! பாபரவயா! இது யார வேலை? இதி லிருந்த உருவங் கள் எங்கே?

பா. அமமணி, அது நன்று யில்லை யென்று மந்திரி கலைத்து விட்டு எழுதினன்.

டா. ஆமாம்.

வா. நீயும் உன் மந்திரியும! மடையன்களே! போங்கள் வெளி யே இட்சணம!

பா. மஹாராணி, மறந்துபோகக்கூடாது சொன்னதை.

[இருவரும் போகிறார்கள்.]

வ. வாசவதத்தை, இனியாவது இச சந்தேகம் விடாயா?

வா. உம்! உம! சொலலமாட்டீர் இனிமேல், எல்லாம் செய்து விட்டு!

வ. ஐயோ! நான் ஒன்றும செயய விலலையே! நீதான் என்னை இவவிதம ஏளனம செய்கிறாய்; இது உனக்கு நியாயமா?

வா. அபபா! உமது நியாயததை நானறி வேன்?

வ. என்ன அறிந்தது? இந்தப பாபரவயனைப பெண்ணென்று நினைத்ததா?

வா. உம்! போனது போகட்டும்—அதை யெலலாம் மறந்து விடும்.

வ. உன் னிஷ்டப்படி.

வா. ஆனால், பிராணநாதா, என் னுத்தர வின்றி இனி நீர் ஒரு பெண்ணையும் மணம்புரிவ தில்லை யென்று பிரமாணம் செய்து கொடும்.

வ. அப்படியே, இனி மணம் புரிவதில்லை, சந்தோஷந்தானு?

வா. சந்தோஷந்தான், பூரணமாக.

மறுபடியும் வசந்தகன் வருகிறுன்.

வச. அதில் எனக்கும் பாதி!

காட்சி முடிகிறது.

---

## மூன்றும் காட்சி.

இடம்—நந்தவனத்தில் ஓர் அடர்ந்த இடம். காலம்—இரவு.

வாசவதத்தையும் காஞ்சனமாலையும் வருகிறுர்கள்.

வா. காஞ்சனு, நீ கூறியது உண்மைதானு?

கா. அம்மணி, சற்று பொறும். உண்மை வெளியாகிறது!

வா. இந்த மாதவிப பொழி லருகில்தானே சந்திப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறுள்? தக்க இடம் கோரினுள்! இம்மலர்ப் பொழிலின் வாசனை மனத்தைக் கவர்கிறதே! குளிர்ந்த காற்று வீசுவதற்கும் இருண் டிருப்பதற்கும் சரியான இடந் தான் இவர்களுக்கு; ஆயினும் என் உடையில் மஹாராஜா வைக் காணும்படியான அவ்வளவு தைரியம் வந்துவிட்ட தல்லவா இச் சிறுமிக்கு! ஆகட்டும், அதை நான் பார்க்கி றேன்!—எல்லாம் நாம் சற்று ஏமாந்து நம்முடைய உடை யை சுசங்கதைக்கு அளித்ததினுல் நேர்ந்தது! அவளையும் சாகரிகை எப்படியோ கைவசப்படுத்திவிட்டாளே.

கா. அம்மா, மஹாராஜா வரும் சமய மாய்விட்டது.—நாம்—[திரும்பிப் பார்த்து] ஓ! அதோ வருகிறுர்போ லிருக்கி றது! நாம் சற்று மறைந்திருப்போம். வசந்தகனும் கூட வருகிறுன். இவர்கள் பேசுவதைச் சற்று கேட்டறிவோம்.

வா. ஆம், ஆம்! இங்கு மறைந்து கொள்வோம்.

[ஒரு புறமாக மறைந்து கொள்கின்றனர்.]

**வத்சராஜனும், வசந்தகனும் வருகிறார்கள்.**

வ. வசந்தகா, வாசவதத்தைக்கு இவ் விஷயம் ஒன்றுந் தெரியாதே?

வச. ஒன்றும் தெரியாது! நான் அவ்வளவு ஜாக்கிரதையாக எல்லாம் ஏற்பாடு செய்திருக்கிறேன் சுசங்கதையுடன். ஒன்றும் பயபபடவேண்டாம்.

வ இதுதானே குறிதத இடம்? என்ன இருண்டிருக்கிறது!

வச. ஆம், இதுதான். சற்றுட்காருவோம் நாம இப் பளிங்குக் கலலின் மீது

வ. தோழா, நீ விரையில் போய் சாகரிகையை அழைத்து வா.

வச ஐயோ! ஆக்கப் பொறுத்தது ஆறப பொறுக்க வேண்டாமா? சாகரிகையை வாசவதத்தையைப்போல உடுத்தி வருவதென்றால இலேசான விஷயமா?

வ. தோழா, நீ எதறகும போய் துரிதப்படுத்து; நான் இக் கொடி வீட்டி லிருககிறேன்; சீககிரம்.

வச. இரும்; நான் போய் அழைதது வருகிறேன் விரைவில்.

[வத்சராஜன் கொடி வீட்டிற்கு செல்ல, வசந்தகன் போகப் புறப்படுகிறான். இச்சமயம் வாசவதத்தையும் காஞ்சனேயும் வெளிவர, அவர்களைச சந்திக்கிறான்.]

வச. [காஞ்சனையைப் பார்த்து] ஆ! சுசங்கதா, உன் புத்தியை மெச்சினேன்! நான் பார்த்தவுடன் அந்த நீலி காஞ்சனமாலை தானோ என்று திடுக்கிட்டேன்! நன்றாக வேஷம பூண்டாய்! சாகரிகை எங்கே?

கா. அதோ.

வச. ஆஹா! வாசவதத்தையே! சரிதான்.—சாகரிகா, நீயும் ராணிதானே; அதனால வாசவதத்தையைப்போல விளங்குவது தவறலல!—வா சீக்கிரம். மஹாராஜா உன் வரவை எதிர்பார்த்து வருநதி யிருக்கிறார் வாருங்கள்.

வ. [வெளி வந்து] வசந்தகா! வந்தாளா சாகரிகை?

வச. உம்முடைய அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். இதோ—

வ. கண்ணே, சாகரிகா! இத்தனை காலம் பிடித்ததா உனக்கிங்கு வர? என் அன்னமே! அநங்கன் விடு மாசுகத்தால ஆருயி ரழியு மென்னை, அன்பினோ டணைந்து, உன் அதர மிரு அமிர்தமதால் உயி ரெய்த அருளாயோ?—

வச. சாகரிகா, என்ன சும்மா இருக்கிறாய்?—இன்னும் பிணங்கி நிற்கிறாயே! நாண மென்ன இனி? வாசவதத்தையின் கடு கடுத்த சொல்லைக் கேட்டு வெறுப் பெய்தி யிருக்கிற மஹா ராஜாவின் செவியை உன் இனிய மொழியினால இன்புறச் செய்!—சுசங்கதா, நாம் போவோம வா. இனி இன்னும் இங்கிருப்பது நியாய மன்று—அரசே, உமக்கனுகூலமாக சந்திரனும் உதய மாகிறான், அதோ!

வ கண்ணே! இதோ பார்த்தனையா! வெட்க மின்றி இச சந் திரன் உன் திற மறியா துதித்தான்! கஞச மலரெலாம் இவன் வரு முன்னே உன் மதியினைக கண்டு அஞ்சிக குவிந் தன! இமந் தரு வெண் மதியொளி இன்பந்தரு உன் விழி யொளிக கொப்பாமோ? பஞச பாணனுக்கு உன் அஞ்ச னக் கண்ணினும், பஞ்சையாம் இப பசுபதி சடையன், விஞ்சிய உதவி யாவானோ? அம்புலி யுடை அமிர்தினும் உன் னதரத்திடை அமிர்தம் மேலான தன்றோ? அணங்கே, இதைவிட்டு நான் அதைப் பருகுவனோ?

வா. [திடீரென்று தன் முகத்தை மூடியிருந்த வஸ்திரத்தை எடுத்து விட வத்சராஜன் பயந்து நிற்பது கண்டு] ஏன் பயந்து நிற் கிறீர்? பருகு மிப்பொழுது!

வ. வாசவதத்தை!

வா. மஹாராஜா! ஏன் சும்மா நிற்கிறீர்? சாகரிகை அதரத் திடை அமிர்தம் வாசவதத்தை வாயிடை விஷமாயிற்றோ? —பிராணநாதா, முகத்தை சற்றெடுத்துப் பாரும், இனி மேல் என்ன போக்கு சொல்லப் போகிறீர்?

வ. கண்ணே, என்னை—

வா. கண்ணே!—என்னை ஏன் கண்ணே என்றழைக்கிறீர்? உமது கண்மணி சாகரிகை இருக்கிறாள், அவளை யழையும்! நானும் சற்று முன்பாக ஏதோ ஞாபக மறதியாக பிராண நாதா என்றழைத்தேன். எனக்கென்ன சுதந்தரம் உம்மை அவ்வாறழைக்க இனி? அது அவளுடையதாயிற்றே!—ஏன் சும்மா இருக்கிறீர்?—நீர என்ன சொல்லக்கூடும்? உமக் கென்ன தெரியும்? கனவிலும் இந்தச சாகரிகையை நீர் கண்டதில்லையே! சித்திரப பலகையி லெழுதிய தெல லாம் சித்தத்தின் செயல! உமக்கேதாவது தெரியுமா? அவளை நேரிற கண்டு பேசியதுணடா? சே! இநதப பூனை யும் பால் குடிககுமா? ஏன் நினறுகொண்டு உமது காதுக் குக் கடுகடுபபைக கொடுக்கும என் மொழியைக கேட்டுக் கொண்டிருக்கிறீர்? போம சாகரிகை யிருக்கு மிடம், அவள் கனியினு மினியமொழியைக் கேட்டு குளிர! சீ! உம்மை வெறுப்பதிற் பயனென்ன? வெட்கமின்றி எலலா மறிநதும் உம்முடன் பேசுகிறேனே நான் இன்னும்!—உம்முடைய குலததின் சுபாவத்தைக காண்பிததீரே!—

வச. தேவி! மஹாராஜாவின் ஒரு பிழையைப பொறுத்தருள வேணடும.—உண்மை என்னவென்றால—

வா. வசந்தகரே! அதென்ன அபபடி கூறுகிறீர? மஹாராஜா அல்லவோ என பிழையைப பொறுக்கவேண்டும். மஹா ராஜா இன்ப சாகரததில மூழ்குவதை நானனறோ இடை யில் வநது கெடுததேன்? ஐயோ பாவம! வாடி நிற்கிறார், வஞ்சியிடம அழைததுச செலலும்; இலலாவிடடால— நான் அழைத்து வருவதா, அரசே?

வ. வாசவதத்தை! உன்னை நான் ஒனறு வேண்டுகிறேன்; என்னை மனனிககமாட்டாயா? உன மேல காதல—

வா. பிராணநாதா, எழுநதிரும். இதென்ன? தனமீதிலேயே தணியாக் காதலகொண்டு தரணியில வேறொரு தஞ்சியை யும் நோக்காத தன் காதலனை காலில வீழ்ந்து வேண்டும

பொழுது மன மிளகா மனைவியு முண்டோ? நீர் சுகமா யிரும்—நான் போகிறேன்.—என் விதி! காஞ்சனு, வா போவோம். [காஞ்சனையுடன் போகிருள்.]

வ. வசந்தகா! வசந்தகா! நான் தேவியின் முகத்தை மறுபடி யும் எப்படிப பார்ப்பது? ஐயோ! நானிபபொழுதென்ன செய்வது? ஒரு புறம் வாசவதத்தையின் கோபத்தை எவ் வாறு போக்கப்போகிறேமென்னும சஞ்சலமும், மற்றொரு புறம் சாகரிகையின் கதி என்ன வாயதோ எனும் சஞ்சல மும என் மனத்தைப பற்றி யிழுக்கின்றனவே!

வச. அரசே, நான்தான் சரி! நான் போய் ராணியின் கோபத்தை எபபடியாவது தணித்து வருகிறேன்—

வ. அப்படியே என் காதலியாம் சாகரிகையின் கதி என்ன வாயதென்று மெல்ல அறிந்துவா.

வச. நீா இங்குதானிரும், நான் விரைவில் வருகிறேன். [போகிருன்.]

வ. ஐயோ! மோபபக் குழையு மனிசசத்தினும் மேன்மையாம் குணமுடை மொய குழலாள் கதமுடன் மதன்விடும் வாளி தனக் கஞ்சுவாளோ? தணிவிலாக் கோபமுடைத் தையல் வெகுளியை விஞ்சுவாளோ? எனைக் காணுது ஏக்க முற்று தன்னை வெறுத்து மிஞ்சுவாளோ? காதல னெனப் பெயர் பூண்டும் கனி வெய்தக் கணமேனும் காணுத இக் காதக னைக் கருதியே துஞ்சுவாளோ! துஞ்சுவளோ! [மூர்சசையாகிருன்.]

அழுதவண்ணம் ரத்னுவளி மெல்ல வருகிருள்.

ர. ஐயோ! நானிபபொழுது என் செய்வது? நடுக் கடலில் மரக்கல முடைந்த மாலுமி யானேனே! வாசவதத்தையோ உண்மையை அறிந்துவிட்டாள! இனிமேல் என் காதலரை கண்ணுரக் காணவும் விடப்போகிருளோ என்முன்? ஐயோ! நான் எதற கென றஞ்சுவேன் இபபொழுது? தான் மணந்த மலரை நான் நுகர்ந்தேன் என்று என்மீது கோபாவேசங் கொண்டிருக்கும் தேவியின் வெஞ் சினத்திற் கஞ்சுவனே?

அல்லது இவ்வுண்மை வெளியாயதே என்று எனை வாட்டும் இந்நாணத்திற் கஞ்சுவனோ? இதுதான் சமயமென்று பேதை என்றும் பாராது பாதகனம்மன்மதன என்மீது பஞ்சபாணங்களையும் அஞ்சாது விடுவதற் கஞ்சுவனோ? என் மனத்தை எநதச சங்கடததிலும் இதுவரையில தேற றிக் கொண்டிருந்த என்னுயிாததோழி இபபொழுது ராணி யின் கையிற்பட்டு என்ன துயருறுகிறாளோ என்றஞசு வேனோ? அலலது என்மீது காதல கொண்டும், நான் இக கதிக்கு வந்தே னென வறிந்தும், ராஜ தாமததிறகுடன் பட்டவராய், எனக் குதவச சகதி யறறவரா யிருக்கும் என் பிராணநாதா என் பொருட்டு அந்த வாசவதத்தையினால என்ன கஷ்டம் அனுபவிககிறாரோ என்று அஞசுவனோ?— சீ! என்னைபபோனற துாபபாககியசாலிகள இவவுலகில ஒருவரு மிரார! நான் ஏனோ இபபுவியில பிறந்தேன் பெண் ணாக? இததுயரம அனுபவிபபதைவிட என்னுயிரை மாயத்துககொளவதே நலம! இனி யோசிபபதிற பயனில்லை. இருந்தென்ன பயன? என் பிராணநாதரை நான் மறுபடி யும் காணடலும் கடினம. அவரைககாணாது நான் வாழ் வானேன? அவருடன் நான் கூடியிருபபது அசாததிய மானல் நான் உயிருடன் கூடியிருபபானேன?—இதுதான் நமககிசைந்த இடம'—இதோ இககொடியைச சுருககிட்டு மடிவோம்—ஆ! இநநிசியில நிசசபதமாய, இநத நந்தவன மெங்கும் சந்திரனொளி பரவி நிறக, மநதமாய்த தென்றல வீச, மலாகளெங்கணும் மணங் கமழ, என்ன ரமணீயமாய் இருக்கிறது! இசசமயததில என் காதலரை நாடி இன்ப நலம் நுகராது நான இறககவேண்டி வநததே! யாா விதி யாரை விட்டது? பிராணநாதா! பிராணநாதா! இனனொரு ஜன்மந்தன்னி லாயினும் உமமை நான் பிரியா தடைகிறேன!

[கழுததில் கொடி யொன்றால் சுருககி விடுகிறாள்.]

வசந்தகன் விரைந்து வருகிறான்.

வச. ஐயோ! மஹாராஜா! மஹாராஜா! தேவி இறககிறாகள்! வாரும்! வாரு மிபபடி!

வ. [திடுக்கிட் டெழுந்து] ஆ! ஆ! எங்கே! எங்கே?—ஆ வாசவதத்தை! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்? இதென்ன மதி ஹீனம்? விடு இக் கொடியை! சாகரிகை யைக் கண்டெடுத்தும் பாபபதில்லை இனி நான்!

ர. ஆனல் பிராணநாதா!—மஹாராஜா!—நான் இறப்பதை ஏன் தடுக்கிறீர்?—என் பொருட்டு உமக்கேன இவவளவு துயரம? நீர சுகமாய் ஒரு மனஸ்தாபமின்றி தேவியுடன வாழும். நானிறந்து உமமை சுகபபடுத்துகிறேன்.

வ. கண்ணே! சாகரிகா!

ர. என்னை ஏன் கண்ணே யென றழைககிறீர? சறறு முன் பாகத்தான் என்னைக் கண்டெடுத்தும பாப்பதில்லை யென்று சததியம் செயதீரே, ஜாக்கிரதை, தேவியாகள கேட்டுவிடப போகிறாகள நீர என்னை கண்ணே யென் றழைபபதை! பிறகு பாதததில வீழ்ந்து வேண்டுமபடி நேருமா.

வ. என் கண்மணி! சாகரிகா! நீயே இபபடிப பேசுதலழகோ? சறறு முனபாக உன்னை வாசவதததை யென்றெண்ணி, எபபடி யிருநதபோதிலும் என் மனைவி யாயிறறே என நினைதது அவளுயிரைக காபபாற்றும பொருட்டு அம் மாதிரி கூறினேன. அதனை உணமை யென நீ நமபலாமா?

வச. ஆமாம், சாகரிகா! ஒரு உயிரைக் காபபாற்றுமபொருட்டு எததனைப் பொய வேண்டுமென்றாலும் பேசலாமென்று தர்ம சாஸ்திரஙகளே கூறுகின்றனவே! அதறகாகததான் நான் தினம தேவியிடம் எத்தனைப் பொய் பேசிவருகிறேன் என்னுயிரைக் காப்பாறற! இனி மஹாராஜாவின் மீது கோபியாதே.—மஹாராஜா, எனக்கு விடையளியும். அதோ சுசங்கதை என வரவை எதிர்பார்ததிருககிறாள். நான் விரைவில போகாவிட்டால இந்த அம்மாளிடம் நீர் படும் பாடு நான் அங்கு படவேண்டும்! நம்முடைய தலைவிதி இது! [போகிறன்.]

வ. என் மனங் கவர் மானே! உன் கர மென்னுங் கொடியால் என் கந்தரத்தைச் சுற்றுவதை விட்டு, இன்னும் ஏன் இவ் வற்பக் கொடியினைக் கரத்திற் கொண்டனை? நீயே விரும் பின் என் இரு கரமெனும் பாச மிருக்கிறது. அவற்ரு லுன்னைக் கட்டி யணைக்கவோ?

ர. ஆமாம், என்னெதிரிலிப்படிப் பேசிவிடும்; தேவி வந்தால் சாகரிகையைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை யென்று, பிரமாணம் செய்து விடும்!

வ. கண்ணே, நானவ்வாறு செய்வேனென நம்புகிருயா நீ?

ர. பிறகு ஏன் தேவியிடம் நேற்றைத்தினம், என் கண்மணியே, உன் உத்தரவின்றி நான் ஒரு பெண்ணையும் மணம் புரிவ தில்லை என்று கூறினீராமே?

வ. அது யார் உனக்குச் சொன்னது?

ர. யார் சொன்னுலுமென்ன? உண்மையா அல்லவா?

வ. சாகரிகா, இப் பளிங்குக் கல்லின்மீது உட்காருவோம்; விளங்கச் சொல்கிறேன் எல்லாம்—முதலில் "கண்மணியே; உன் உத்தரவின்றி" என்று சொன்னேன் நான்?

ர. எல்லாம் சொல்லி யிருப்பீர!

வ. உனக்கு ஜோஸ்யம் தெரிந்ததோ? அதிருக்கட்டும்—நான் சொன்ன தென்னவென்ருல் இனிமேல் நான் அவளுத்தர வின்றி ஒரு பெண்ணையும் மணம் புரிவதில்லையெனக் கூறினேன்!

ர. பிராணநாதா!—என் கதி என்ன வாவது?—உம்மை நான் நேரிற் காணவும் தேவி விடை யளிப்பாளோ?

வ. கண்ணே! ஏன் பயப்படுகிருய்? வா உட்கார்!

ர. உமது பக்கத்தில் உட்கார எனக் கென்ன சுதந்தரம்? நீர் தான் கூறிவிட்டீரே—

வ. என் கண்ணே, உன்னைத் தான் நான் முன்பே மணம்செய்து கொண்டேனே, இனி ராணியின் உத்தர வென்னத்திற்கு

ஜ. எப்பொழுது மணந்தீர்?

வ. நாமிருவரும் காந்தர்வ மணம் புரியவில்லையா? க்ஷத்ரியர் காளாகிய நமக்கு அது விதிக்கப்பட்ட தென்பதை மறந்தனையோ?—இப்பொழு தென்ன சொல்கிறாய்? ஏன் தலை குனிந்துகொண்டாய்? உம்—உனக் கேதாவது சந்தேக மிருக்கிறதோ?

ஜ. அதிருக்கட்டும்—இப் பூம்பொழிலில் அம்புலி என்ன அழகாய் விளங்குகிறது கண்டீரா? இப்பொழுது உம்முடைய வாசவதத்தை உமது பக்கத்தி லிருந்தால உமக்கெவ்வளவு சந்தோஷமா யிருக்கும்—

வ. நீதான் இருக்கிறாயே.

ஜ. உம்!—இதெல்லாம் மேனுக்கு?

வ. இல்லை! இல்லை!—

வாசவதத்தை காஞ்சனையுடன் திடீரென்று வருகிறாள்.

வத்சராஜனும் ரத்னவளியும் பயந்து எழுந்திருக்கிறார்கள்.

வா. மஹாராஜா! எழுந்திருக்கவேண்டாம்! எழுந்திருக்க வேண்டாம்!—தேவிபாரே! உட்காருங்கள்!—உடகாருங்கள்!— [அவர்கள் கரகளைப்பற்றி]

அடி சாகரிகா! இனிமேல் என்ன பொய்பேசப் போகிறாய்? 'இப்படிப்பட்ட புருஷனும் இவ் வுலகி லிருக்கிறாரோ' அம்மணி ' நான் மஹாராஜாவை நேரில பார்த்ததேயிலலை யே! படத்தில் யாருடைய ரூபமோ தெரியாதே!' இப்பொழுது தெரிந்ததா? படத்தி லெழுதிய முகமும் இந்த முகமும் சரியா யிருக்கிறதா வென்று அவ்வளவு அருகில் முகத்துடன் முகம் வைத்தும் பார்த்தாயோ? என்ன நாணம்! என்ன வெட்கம்! ஒன்று மறியாளாம் கன்னி, அவளை ஓடிப் பிடித்ததாம் ஒன்பது மாதத்து ஜன்னி!—உன்னைக் கேட்பதில் என்ன பிரயோஜனம்? இதோ சந்திர குல வள்ளல், கௌசாம்பி மன்னன், உலகாள னிருக்கிறார், அவரைக் கேட்போம்.—ஏன் மஹாராஜா? இப்பொழு தென்ன சொல்கிறீர்? இதுவும் விளையாட்டோ?

வசந்தகன் வருகிறான்.

ஆ! நீயும் வந்தாயா? உன் கனவு என்னவா யிருக்கிறது கேட்போம்.—மஹாராஜா கைப்பிடியா யகப்பட்ட பிறகு இன்ன உத்தரவு கூறுவதென்றறியாது விழிக்கிறார்! ஏதாவது போக்கு சொல்ல நீ அவருக்காக!—உம்—

வச. தேவி, நீங்கள் என்னை நம்பினாலும் சரி! நம்பா விட்டாலும் சரி!—உண்மை என்னவென்றால்—

கா. "நான் பேசுவது பொய்!"

வச. அம்மா, நீ ஒருத்தி வந்தாயே, அம்மா!—

வா காஞ்சனா, வசந்தகன் புளுகட்டும், நீ யேன் தடுக்கிறாய்?

வச. உண்மை என்ன வென்றால்—உம்—சாகரிகை இந்த உடையில் சற்று முன்பாக இங்கு வந்து இந்தக் கொடியால் சுருக்கிட்டு மடியப் பார்த்தாள். நான் நீங்கள் தானென எண்ணி கூச்சலிட்டேன், உடனே மஹாராஜா வந்தார்; அவரும் நீங்களென ஏமாந்து, இக் கொடியை வாங்கிவிட்டுக் காப்பாற்றினார்!—

வ. வாசவதத்தை, இதி லணுவளவேனும் பொய் யில்லை!

வா. பிறகு நான் என்று நினைத்தே சாகரிகையைக் கட்டியணைத்தீர்!—என்னிடம் இதை கூற வருகிறீரே!—காஞ்சனா, முழுப்பூசனிக்காயை சோற்றுடன் மறைக்கும் இப் பார்ப்பானை இக் கொடியால் கட்டி இழுத்துக் கொண்டு போ.

கா. வாருமையா வசந்தகரே, நீலி யல்ல நான்! வாரும்!!

[கொடியால் வசந்தகனைக் கட்டி யிழுத்துக்கொண்டு போகிறாள்.]

வா. சாகரிகா, நீ வா இப்படி, உன்னையும் தண்டிக்கும் விதத்தில் தண்டிக்கவேண்டும்—அந்த சுசங்கதை எங்கே?—

[சாகரிகையை அழைத்துக்கொண்டு போகிறாள். வத்சராஜன் திகைத்து நிற்கிறான்.]

காட்சி முடிகிறது



# மூன்றும் அங்கம்



## முதற் காட்சி.

இடம்—சிறைச்சாலை. காலம்—இரவு.

கையில் ஒரு நிருபத்துடன் ரத்னாவளி துக்கித்தவண்ணம் நிற்கிருள்.

ர. பிராணநாதா! பிராணநாதா! இந்தப் பாக்கியத்தையாவது பெற்றேனே!—இதெப்படி இங்கே வந்தது? முதலில் என்ன எழுதி யிருக்கிறரென நன்றாய்ப் படித்துப்பார்ப் போம். [படிக்கிருள்.]

"கண்ணினிய காதலியே! கடிதினி லுனைக் காண்பேன் நான், அஞ்சன விழி அன்னமே, அஞ்சாதிருப்பாய் நீ"! இது என் பிராணநாதரிடமிருந்து வந்த தென்பதற்குச் சந் தேக மில்லை. இதோ அவருடைய மோதிர முத்திரை யிருக்கிறது!—ஐயோ! என் காதலரை நான் கடிதிற் காணப்போகிறேனே? எதற்கும் ஈச னிருக்கிருர்.—ஆயி னும் இத்தனைக் காவலுள்ள சிறையிலவர எப்படி இங்கு வரப்போகிருர்? தேவியோ இங்கு ஒரு ஆடவரும் வரலா காதென உறுதியாய் நிபந்தனை செய்து கடூரமான காவ லமைத்திருக்கிருர்கள்; இவர்கள கண்ணிலெல்லாம் படாது ஒருவரு மறியாதபடி என் பிராணநாதர் என்னை எப்படி வந்து காணக்கூடும?—ஆயினும் ஒன்று, இந்த நிரு பம் எப்படி யிங்கு வந்தது இவர்க ளறியாதபடி? அப்படி யே என் பிராணநாதரும் வர லாகாதா?—ஈசனிருக்கி ருர்!—ஐயோ! பிராணநாதா! நீர் என்னைப்பார்க்க வருவ தாயின் சீக்கிரம வாரும். தாமதிப்பீராயின் இறந்தபின் தான் என்னைக் காண்பீர! உம்மைப பிரிந்த ஆயாசத்தால் என் உடல் நாளாவர்த்தியில மெலி வடைந்து வருகிறது! இதோ என் கை வளை நழுவுகிறதே!—ஐயோ! தேவியவர் கள் நான் படும் துயரம் இன்னதென அறியாது தினம் ஒரு வயித்திய சாஸ்திரத்தில் வல்ல ஸ்திரீயைக் கொண்டு வந்து

காணபிககிறாகள !—இந்த வயித்தியத்தி லெல்லாம ஆறு மோ என துபரம ? தீருமோ என்நோய் ? என்னைப பிடிக்கும் வியாதி, என பிராணநாதா, உம்மா லன்றி வேறெவராற் போகும ? பிராணநாதா !—ஆ !—அதோ தேவி வருகிறாள் போ லிருக்கிறது இப்படி நம்மை விசாரிகக !—இந் திரு பத்தை மறைதது வைககவேண்டும்—

வாசவதத்தை பெண்ணுருவம் பூண்ட வத்சராஜனுடன் வருகிறாள்.

வா. ஆ ! சாகரிகா ! என்ன திடுககிட்டாய் ?—ஒன்றும் பயப படாதே ! இநத அம்மாள கோசலநாட்டிலிருநது வநதிருக கும வயித்திய சாஸ்திரம் நன்றாயக கற்றறிநதவாகள எப படியாவது உனக் கிருககும தேக அசௌககியத்தைத் தீாதது விடுவதாகச சொலகிறாகள ; எனககும மிகவும் நம பிக்கை யிருக்கிறது. உன் கையைச சற்று—

பாப்ரவ்யன் வருகிறான.

பா. தேவி, ஒரு மனு

வா. உன்னை யாா வரசசொன்ன திஙகே காவலை விட்டு ?

பா. மன்னிககவேண்டும. டாமரவயன பெரியவனா, நான் பெரி யவனா ?

வா. நீதான் பெரியவன் போ சீககிரம !

[பாப்ரவ்யன போகிறான்.]

என்ன சொனனாய, சாகரிகா ?

ர. அமமாணி, நான் உமக்கு எததனை முறை கூறி யிருக்கிறேன ; இநத வயித்தியத்தி லெல்லாம பிரயோஜன மில்லை அம் மணி ! நானிவவண்ணம் சாகவேண்டுமென்றுதான் எனககு விதித்திருநதால நான் இறககவேண்டியது தானே ! அதைத தடுகக முயலுவதில பிரயோஜன மென்ன ?

டாமரவ்யன் வருகிறான.

டா. அம்மணி, நீஙகள சொலலுஙக !—

வா. சொலவது என்ன நான் ? டாமரவயா ! உன்னை யார் அழைத்த திங்கு ?

டா. நானுத்தான் வந்தேன் அம்மணி.—இந்த பபபரவாயனுக் காரு நானு ஓயர மல்லா ?

வா. ஆமாம், போ ! பயித்தியம் !

டா. சந்தோஷம. [போகிறன.]

வா. சாகரிகா, இம்மாதிரி பேசாதே ஸ்வாமி உனககொன்றும் அபபடி கெடுதியாக விதிததிருககமாட்டார், என சொலலைக் கேள் உன தேக அசௌக்கியததை ஒன்றும் ஒளியாது இந்த அம்மாளிடம் கூறு, எபபடியும் தகக சிகிசசை செயது சுவஸதப்படுததுவாாகள். கிட்டாத பொருளைப்பறறி நினைதது ஒனறும் வருததபபடாதே, தெரியுமா ?—

மறுபடியும் பாப்ரவ்யன் வருகிறன்.

பா. தேவி ! நான்தானே அழகு ?

வா. இதென்ன தொந்தரவா யிருககிறது !—பாபரவயா ! இன்னெரு முறை இங்கு வராதே !

பா. கேட்ட கேள்விககுப் பதில ?

வா. ஆமாம, போ ! [பாப்ரவ்யன் பேகிறன்.]

வ. சஙகோசபபடுகிறள் போலிருககிறது.—உஙக ளெதிரில கூற—சறறு நீங்கள்—அப்புறம் போயிருந்தால—நான்தீர விசாரித்து—பிறகு இனனதென் றறிநது—தகக ஒளஷதம் கொடுக்க—முயலலாம.

மறுபடியும் டாம்ரவ்யன் வருகிறன்.

டா. என்ன அமமணி, நானதானே அழவு ?

வா. இதெனன கஷ்ட காலமா யிருககிறது ! டாமரவயா ! இனனெரு முறை நீ இங்கு வந்தால உன்னைத் தண்டிப்பேன நான், போ வெளியே !

டா. உம் !—நான்தானே ?—

வா. ஆமாம, நீதான் ; போ வெளியே !

டா. ஆ ! சரி ! சரி ! [போகிறன்.]

வா. ஆம், அப்படித்தானிருக்கவேணடும் சகஜம்தான் நான் அடுதத அறையில இருககிறேன ; வேணடியபொழுது என்னை அழையுங்கள வருகிறேன். சாகரிகா, ஒன்றும் அஞ்சவேணடாம, ஒன்றும் ஒளியாது உன் தேக ஸ்திதி யைக கூறு—

பாப்ரவ்யனும், டாமரவ்யனும், மறுபடியும் சண்டையிட்டுக்கொணடு வருகிறார்கள்.

பா. அமமணி! எஙக ளிரண்டு பெயரில யார கலியாணம் பண் ணிககொள்ள வேணடும் ?

வா. இதென்ன ! பயித்தியங்களாய வநது சேரந்தன !

பா. சீககிரம சொலலுஙகளம்மணி, யார கலியாணம பண்ணிக் கொளளுவது?

வா. யாரை ?

பா. வெளியில இநத அமமாளோடு வநதிருக்கும் பெண்ணை.

வா அம்மா, இவாகள கூறியதைக குறிதது யோசிககவேண டாம, இரணடும இரணடு பயித்தியஙகள ! உமமுடைய வேலையைப பாரும்—நீஙகள வாருஙகள இபபடி, உங்களை இஙகு காவலிருககச சொன்னேனு, சண்டை போடச சொனனேனு? [இருவரையும அழைததுச செல்கிருள.]

வ சாகரிகா, உன கையைக கொடு இபபடி.

ர. அமமா, நீர ஏன வீணில கஷ்டமெடுத்துககொள்ளுகிறீர ? உம்மால என் வியாதியைத தீரகக முடியாது. நான் சொல் வதைக கேளும.

வ. நான் சொலவதைக கேள்.—உன வியாதியை நான் எப்படி யும் நீககிறேன்.

ர. இபபடி இதுவரையிற சொல்லினவர் அனேகர.—

வ. ஆம், அவர்களுககெலலாம் உன் வியாதி இன்னதென்று தெரியாது, அதனுல தவறினுர்கள. எனக்கு உன் வியாதி இன்னதெனறு தெரியும—

ர. என்ன சொல்லும?

வ. சொன்னால் உண்மையை ஒப்புக்கொள்ளுகிறாயா?

ர. உம்—

வ. மஹாராஜாவின்மீது கொண்ட காதல்!—உண்மைதானா?—என்ன பதில் கூறுகிறாய்?

ர. இதை எப்படியாவது அறிந்திருக்கலாம்;—அதிருக்கட்டும், அதைத் தீர்ப்பதாகச் சொன்னீரே செய்யும். எப்படித் தீர்க்கப்போகிறீர் என் மனோ வியாதியை?

வ. அவ் வியாதியை உண்டாக்கினவரை மறந்துவிடு, வியாதி போய்விடும்.

ர. என்ன சொன்னீர்? என் பிராணநாதரையா மறந்து விடும்படி கூறினீர்? அதைவிட என்னை இறக்கும்படி கூறும்! நான் இறந்தாலும் பிறப்பேனே யொழிய என் காதலரை மறவேன் அரை க்ஷணமேனும்—

வ. சாகரிகா, நான் சொல்வதைக் கேள், நீ அவர்மீது இவ்வாறு காதல் கொண்டு பயனென்ன?

ர. ஏன்?

வ. அவர் உன்னை இனி கண்ணெடுத்தும் பாரார்.

ர. இவ் வார்த்தையை மும்மூர்த்திகளும் வந்து கூறினபோதிலும் நம்பமாட்டேன், நீர் கூறினால் நம்பிவிடுவேனோ? இதோ பாரும், அவர் என்னை எப்படியும் மணப்பதாகக் கூறி என் விரலில் இட்ட மோதிரம்.—

வ. ஆனால் இதைப் பார்!

ர. ஆ!—இது உமக் கெப்படி கிடைத்தது? என் பிராணநாதருடைய தாயிற்றே!—நான் கொடுத்த தாயிற்றே!

வ. ஆம், உன் பிராணநாதருடையதுதான் முன்பு—இப்பொழுது அவருடைய பிராணநாயகி யுடைய தாயிற்று!

ர. என்ன!

வ. சாகரிகா, நான் சொல்வதைக் கேள். மஹாராஜா என் மீது காதல்கொண்டு இப்பொழுது என்னையே மணம் புரி

வதாகச சத்தியம் செய்து இடமோதிரத்தை என்னிடம் கொடுத்திருககிறார். இபபடி யிருக்கும்பொழுது நீ அவர் மீதினில காதல கொண்டு பயனென்ன ! ஆடவர் மனந்தான சபலமானதென்று உனக்குத தெரியுமே? இனி இந்த ஆசையை விட்டுவிடு—

ர. இதெலலாம ஏதோ சூது ! நான ஒனறும் நமபமாட்டேன் என் காதலா என்னை ஒரு காலும மறவார ! என்னை விட்டு உம்மை யவா மணபபதாவது ? கூடிய சீக்கிரததில் என்னை இவவிடம் விடடு—

வ. இன்று வெளியே அழைததுப போவதாக எழுதினரோ உனககு ? எலலாந தெரியு மெனககு அந நிருபம் நான் தான எழுதச சொனனேன, எஙகு நீ ஒருவேளை அதறகுள் உயிா விடுகிறாயோ வென்று பிறகு அவரிடம், உன்மீது மனமிரஙகி, நான நேரில போய உணமையைக கூறி உன் மனததைத திருபபிவருகிறேன என்று கூறி வநதேன்.— இனி என பிராணநாதாமீது காதலகொணடு பயனென்ன?—

ர. போதும நிறுதது ! இனி ஒரு வாாததையும பேசவேண டாம என்னிடம ! நீ யாரோ மோசககாரி ! என்னை இவ விதம மோசம் செயய வநதிருககிறாய் ! என பிராணநாத ராவது என்னை பறபபதாவது ? அவலட்சணம் பிடித்த உன்னை மணபபதாவது ?—ஆ ! பிராணநாதா ! பிராணநாதா ! இபபடியும் என்னை ஹிமசிதது என மனததைக கலககு வீரா ! என் கண் முன் வநது என்னை இத துயர்க்கடலி னின்றும கரையேறறமாட்டீரா ?

வ. கண்ணே, சாகரிகா,—

ர. ஆ ! நீ யாரடி என்னைக கண்ணே யென்றழைபபதறகு ? என் அருகில வராதே !

வ. சாகரிகா, அவசரபபடாதே, என்னருகில வா. உன துயர் தீர என்னிடம் ஔஷத மிருக்கிறது.

ர. ஐயோ! என்னைத் தீண்டாதே, பாவி!—உன்னைத் தீண்டலும் பாபம்! உன ஔஷதம் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்!—ஈசனே! இதுவோ என் விதி!

வ. என் கண்மணியே! இன்னும் அறிய வில்லையா நானின்னு னென்று?

ர. ஆ! பிராணநாதா!

வ. மெல்லப பேசு! தேவி இருக்கிறாள் பக்கத் தறையில.

ர. பிராணநாதா! பிராணநாதா!—உடமைக கண்டேனே! கண்ணாரக் கண்டேனே இன்று நான!—பிராணநாதா! இங் கெபபடி வந்தீா?—இதென்ன கோலம?—

வ. உன்னைககாண இககோலம்! நீ தேக அசௌககியமாயிருப பதை யறிநது இச சூது செய்யாவிட்டால உன்னைக் காணப தெபபடி?

ர. ஆமாம், இபபொழு தெல்லாந தெரிகிறது! நீா சொஸதப படுத்த வநதீரோ? சொஸதபபடுததுமு—

வ. நீதான் கூறிவிட்டாயே எனனைத தீணடலும பாவமென்று!

ர. ஆமாம்! உம்மை இபபடித்தான பரீக்ஷிககச சொனனாக ளோ என்னை?

வ. இபபொழுது இந்த ஔஷதம கொடுததால உன அசௌக கியம் தீராதோ? [முததமிட்டு]

ர. தீாந்தது.

மறுபடியும் வாசவதத்தை வருகிறாள்.

வா. என்ன இத்தனை நேரம்?—ஆ! சாகரிகா! என்ன இதறகுள் உன தேகம் சௌகய மாய்விட்டாறபோ லிருக்கிறதே!

ர. இல்லை அம்மணி, கொஞ்சம் சௌககியமாகத்தான் இருககிறது, இந்த—அமமாள் கொடுத்த மருந்தினால்—

வா. மிகவும சநதோஷம்! எப்படியாவது நீ சுகபபட்டாற் போதும். அம்மா, வியாதி முழுதும் நீங்கி சாகரிகை சுகபபட்டால் நீர் என்ன வேண்டியபோதிலும் அதைததருகிறேன்.

வ. என் பாக்கியம்.

வா. சாகரிகா, என்ன முக மலர்ச்சி யுடையவளா யிருக்கிறாய்! அந்த ஔஷதம் நானும் சாப்பிடலாமபோ லிருக்கிறதே. கொஞ்ச நேரத்திற்குள்ளாக இவ்வளவு ஆச்சரியகரமான உற்சாகத்தைக் கொடுத்தது சிறந்ததாகவேயிருக்கவேண்டும்.

பாப்ரவ்யனும், டாமரவ்யனும் சண்டையிட்டுக்கொண்டு வருகிறார்கள்.

இதென்ன? இதென்ன இது?—நில்லுங்கள்! என்ன சண்டை?—

டா. என்னைப் பாத்துதான் சிரிச்சா அந்தப் பொண்ணு, நான் தான் கண்ணாலம் பண்ணிக்கப் போறேன்!

பா. இல்லை, அம்மணி! என்னைப் பார்த்துதான் சிரித்தாள், நான்தான் கலியாணம் பண்ணிக்கொள்ளவேண்டும்.

வா. உங்களுக்குத் தக்க சிட்சை செய்கிறேன், பொறுங்கள்!— சாகரிகா, நாளைத்தினம் இந்த அம்மாளை அழைத்து வருகிறேன். நேர மாயது, விடைகொடுத் தனுப்பு.

வ. [ஒரு புறமாக] கண்ணே! பயப்படாதே. எப்படியும் நாளைத் தினம் தப்புவிக்கிறேன்!

ர. [ஒரு புறமாக] சரிதான், நான் கூறியதும் ஞாபக மிருக்கட்டும். தேவிக்கு அந்த மருந்து கொடுக்கப் போகிறீர்!

வ. [ஒரு புறமாக] இல்லை! இல்லை!

[ரத்னவளி தவிர மற்றெல்லோரும் போகிறார்கள்]

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் காட்சி.

இடம்—சிறைச்சாலை வெளிப்புறம் காலம்—காலை.

டாமரவ்யனும், பெண்ணுடை தரித்த வசந்தகனும் வருகிறார்கள்.

வச. இப்படி வாரும். அங்கு யாராவது நாம் பேசுகிறதைக்கேட்டு விடப் போகிறார்கள்.

டா. இதோ உத்தரவுபடி—அமமா, உன்னோடே சரியா பேசரத் துக்குக் கத்துக்கினு வந்தூட்டனே அண்ணாத்தெகிட்ட

வச இதுதானோ?

டா. இல்லே! இலலே! வேறே இாக்குது!—இதோ!—

வச சரி இதிருக்கட்டும—நான் இச சிறைசசாலே திறவு கோல கொண்டுவரச் சொன்னேனே, எங்கே?

டா. உம்! உம்! அதெலலாம கொணடுவந்திர்க்கறே!—அதெதெ கொடுதராக்கா—உம்—

வச என்ன?

டா. உம்—என்னெ—உம்—

வச. என்ன? சீக்கிரம் சொலலும், நாழி யாகிறது—

டா. அவசரப்படககூடாது—உம்—இந்த—உம்—

வச. என்ன இநத?

டா. இந்த—உம்—எனனமோ சொலறுங்களே—உம்—

வச. எனன சொலகிறாகள?—சீக்கிரம—கொடும்—சாவியை—

டா. என்னே—உம்—க—க—க—கல்—கலலு—

வச. கல்லா?

டா. அல்லா! அலலா! கல—கல்லா—கலலாணம! பணணிக் கிறையா? [தலையைத் திருப்பிக் கொள்கிறான்.]

வச. முன்பு சாவியைக் கொடு மிபபடி.

டா. இதோ—[திறவுகோலக் கொடுககிறான்.] அமமா,—உம—

வச. ஆமாம, கலியாணம் ஒனறுதான் குறைவு—முதலில போய் எனனே எபபடி அழைபபதெனக கறறுககொணடு வாரும்; பிறகு பாாததுககொளவோம.

டா. ஏ!—யாருகிட்ட கத்துககினு வாரது?

வச. உங்க ளண்ணாததையிடம் போயப கற்று வாரும்.

டா. இதோ கத்துககினு வாரேன்! ஒரு வேளெ அண்ணாதெதெ சொல்லாபபோனு?

வச. வேறு யாரிடமாவது கற்று வாரும்.

டா. உம்! உம்! [போகிறான்.]

துணி மூட்டை யொன்றை எடுத்துக்கொண்டு ஸ்திரீ உடை தரித்த வத்சராஜன் வருகிறான்.

வ. கொடுத்தானா திறவுகோலை?

வச இதோ. [அதை அரசனிடம் கொடுத்து] நீர் சீக்கிரம் உள்ளே போய் சாகரிகையை ஆண் வேடம் பூணச் செய்து அழைத்து வாரும். நான் வெளியிலிருந்து ஒருவரும் வராதபடி ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டிருக்கிறேன். போம், போம்! அதோ பாப்ரவ்யன் வருகிறான். போம், போம்!—

[வத்சராஜன் போகிறான்.]

பாப்ரவ்யன் வருகிறான்.

பா. போய்விட்டானா தம்பி?

வச. அப்பொழுதே போய்விட்டாரே.

பா. உம—என்ன கேட்டான் உம்மை?

வச. தன்னை மணம் புரியும்படி கேட்டான்.

பா. ஆ—பார்த்தீர்களா அந்த திருட்டுப் பயலை! நான் எனக்காகப் பேசும்படி கேட்டால், தனக்காகப் பேசினான்! உம—அதற்கு ஒப்புக்கொண்டீரா?

வச. உம்மை விட்டு அவனையா கண்ணெடுத்துப் பார்ப்பது நான்? அவன் என்னை அம்மாவென் றழைக்கிறானே!

பா. பாபம்! ஒன்றும் அறியாதவன்! மூடன்—அம்மணி என்று அழை என்று நான் சொல்லி அனுப்பி யிருக்க, அம்மா என றழைக்கிறானே! ஐயோ சாமி!

வச. ஓ! சரிதான்! நீர் சொல்லி யனுப்பியதுதானா? புத்திசாலி தான!

வாசவதத்தையும், அழுதவண்ணம் டாமரவ்யனும் வருகிறார்கள்.

டா. இந்த அம்மா கிட்டதான் சாவி கொடுத்தேன்!

[இவர்களைக் கண்ட வசந்தகன் ஓடிப் போகிறான்.]

வா. ஓஹோ! சந்தேகமில்லை! வசந்தகனதான்! எபபடி ஓடுகிருன்! —பாப்ரவயா! டாமரவயா! நீங்களிருவரும் எபபடியாவது ஓடிபபோய்ப பிடிததது வாருஙகள் அவனை.

[பாப்ரவ்யனும டாமரவ்யனும பின தொடாந்து ஓடுகிருாகள்.]

ஏதோ சூது நடக்கிறதென்று அபபொழுதே நினைததேன். இபபடியா இருநதது! மஹாராஜா சிறைசசாலையிலதானிருககிருா! அதோ பேசசரவம் கேட்கிறது! இருவரும வரட்டும வெளியே, மறைநதிருநது என்ன பேசிககொள கிருாகள கேட்போம்! [உளளே பாாதது]

ஓஹோ! சாகரிகை ஆண வேடததுடன் வருகிருள!

[ஒளிநது கொளகிருள.]

ஆடவனுடை தரிதத ரத்னுவளியும, ஸ்திரீ யுடை தரிதத வத்சராஜனும வருகிருாகள.

வ. வா, சீககிரம

ர. பிராணநாதா, இநத உடையில வெளியில வருவதென்ருல் —வெடகமா யிருககிறது.

வ. இதையெலலாம பாாததால இபபொழுது உதவுமா? வா, சீககிரம.

ர. வெடகமாயிருககிறதே, பிராணநாதா!—

வ. ஆனல இநதச சிறையிலேயே அடைபபட்டிருககிருயா?

ர. ஏனே?

வ. ஆனல வா

ர. யாராவது பாாததால என்ன செய்வது?

வ. பாாத்தாலும பெரிதலல, ஒருவரும் நபமை இன்னுரெனறு கண்டுபிடிககமாட்டாாகள.

ர. யாராவது என்னை யாரெனறு கேடடால நான் என்ன சொலவது?

வ. என் கணவன் நீ யென்று சொலலிவிடு.

ர. ஓ! நான் உம்முடைய கணவனே? நீர் என்னுடைய மனைவியோ? ஆனல நான் சொலகிறபடி யெலலாம நீா கேட்க வேண்டுமலலவா?

வ இப்பொழுதென்ன கேளாதது? கால தாமதம் செய்யாதே, வா சீக்கிரம். தேவி வரப் போகிறாள் ஒரு வேளை யேதாவது அறிந்து.

ர ஆம், ஆம்; சீக்கிரம் இதைவிட்டுப் போய்விடுவோம். ஐயையோ! தேவி இதை அறிந்தவுடன் மிகவும் நம்மீது கோபங் கொள்வார்கள். இவ்வளவு சூது செய்தோமே என்று பற்றிக்கொண்டு எரியும். பிறகு அவர்கள் முகத்தை நான் எப்படிப் பார்ப்பது?

வ. வா, வா; சீக்கிரம். நேரமாகிறது.—எங்கே வசந்தகன்? இங்கு காவலிருக்கச் சொன்னேனே?—பிறகு நம்மிடம் வந்து சேர்வான்.—வா போவோம். சாகரிகா, என்ன நகைக்கிறாய்!

ர. தேவியின் கண்ணில் மண்ணைப் போட்டோமே என்று!

வ ஆம், ஆம்! நன்றாய்ப் போட்டோம்.

வாசவதத்தை மறைவிடமிருந்து வெளி வருகிறாள்.

வா போடுவீர்கள்! போடுவீர்கள் ஏமாந்தால்! அப்படியா சமாசாரம்? இவ்வளவு தூரம் வந்து விட்டார்களா? பிராண நாதா! முகத்தைத் திருப்பிப் பாரும்! என்ன மதியற்றவள் நான்! இந்த வேஷத்தை இத்தனை காலம் கண்டு பிடியாதிருந்தேனே!—ஏனடி யம்மா! வயித்திய சிகாமணி! நீ அங்க தேசத்திலிருந்து வந்தவளல்ல?—விவாகமே வேண்டாமென்று கன்னிகையா யிருந்துவிட்டவளல்ல?—இந்த அம்மாளுக்குக் கண்டிருக்கும் வியாதியை எப்படியும் தீர்ப்பாயல்லவா? ஆம், உண்மைதான், உம்மையன்றி சாகரிகையின் வியாதியை மாற்ற வல்லார் யார்?—என்ன மதி போசம் போனேன்! வெட்கமில்லை?—வாயைத் திறவாதீர் இனி!—

[சாகரிகையிடம் திரும்ப இச்சமயம் வத்சராஜன் மெல்லப் போய்விடுகிறான்.]

இந்த அம்மாள் என்ன சொல்கிறார்கள் கேட்போம்; இந்த அம்மாள் என்கிறேன்! இந்த ஐயா! ஏனையா, தாங்களை

எந்த ஊர் ? என்ன விசேஷம் ? ஏ திப்படி வந்தது ? இந்த அம்மாள் உம்முடைய மனைவியோ ? விவாகமாய் எத்தனை கால மாயது ?—அடி சாகரிகா ! இவவளவு சூது உனக்குத் தெரியுமென்று எனக்கு அபபொழுதே தெரியாமற போயிறறே ! என் கண்ணில மண்ணைப போடடப பாாத்தா யலலவா ? எல்லாம இந்த— [திரும்பிப் பார்த்து] ஆ ! எங்கே மஹாராஜா ? ஓகோ ! ஏமாந்தோமே ! போய் விட்டார் எங்கேயோ ! பிறகு கேட்டால ஒன்று மிலலை யென்று சொலலிவிடுவாா. கைப்பிடியா யகபபட்டவரை விட்டோமே !—சாகரிகா, பிறகு உன்னை விசாரிக்கும் விதத்தில விசாரிககிறேன் ! போ சிறைசசாலைககுள் ! என் கண்ணில மண்ணைப போடுகிறதை நாளைத்தினம் பாாக்கிறேன் !

[சாகரிகையைச சிறையி லடைதது பூட்டிவிடுகிருள்.]

பாப்ரவ்யனும், டாமரவ்யனும் வருகிருர்கள்

பா. அந்த அமமா அகபபடவிலலை.

வா. அம்மாளாவது ! இன்னும பயித்தியம் விடவிலலையா ? ஓடின வன் வசநதகனுயிறறே ! அதிருககட்டும மஹாராஜாவை எதிரில் கண்டீரா ?

டா. இலலெ.

பா. மஹாராஜாவைப் பாாக்கவிலலை ; அந்த வையித்திய அம்மா மாத்திரம இப்படி அரண்மனைக்குள்ளாக விரைந்து போனுர் கள்.

வா. வேறு எங்கே போகபபோகிருர், நான் பாாத்துக்கொள்கிறேன் மஹாராஜாவை. நீங்கள் போய எப்படியாவது அந்த வசந்தகனைப பிடித்துவரவேண்டும், தெரியுமா ?

டா. பிடிசசி வந்தா அநத அம்மாளை எனக்குக் கண்ணுலம் பணணிததாறிங்களா ?

பா. எனக்கு, எனக்கு அம்மணி !

வா. நல்ல மூடாகள் ! அம்மாளல்ல அது—வசந்தகன் !

டா. பரவா இல்லெ அம்மணி! நான் கண்ணாலம் பண்ணிக்றேன்!

வா. உனக்கென்ன பயித்தியமா?

டா. இல்லாப்போனா எனக்கு மந்திரிவேலெ வாணும் அம்மணி!

வா. ஆமாம், அது ஒன்றுதான் குறைவு! ஒதுங்குங்கள்!

[போகிறாள்.]

பா. தம்பி! எல்லாம் உன்னாலே கெட்டுவிட்டுதடா!

டா. அல்லாம் உன்னாலேதான் நான் கெட்டேன்!

பா. போனாலே போகிறது, இப்பொழுது என்ன செய்வது நாம்?

டா. அண்ணா, எனக்கு ஒரு நல்ல உத்தி தோணுது, ரெண்டுபேரும் காதெப்பிடிச்சிக்கினு உன்னாலே நாங்கெட்டேன் என்னாலே நீ கெட்டே யிண்ணு அழலாமா?

பா. அதாவது செய்யலாம்!

[இருவரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது



## மூன்றும் காட்சி.

இடம்—அரண்மனையில் ஓர் அறை. காலம்—இரவு.

வத்சராஜனும் வாசவதத்தையும் வருகிறார்கள்.

வ. வாசவதத்தை, நான் சொல்வதைக்கேள்.

வா. என்ன கேட்பது? இனிமேலும் கேட்கவேண்டுமோ? கேட்டு கேட்டு ஏமாந்தது போதாதோ?

வ. ஐயோ! நீ என்னவோ மதிமோசம்போயிருக்கிறாய். நானாவது பெண் வேடம் பூண்பதாவது? நான் இன்றைத்தினம் காலேதானே அங்கதேசத்திலிருந்து வந்தேன்.

வா. ஆமாம், போதும் நிறுத்தும். இதைவிட அத்தாட்சி இன்னும் என்ன வேண்டும்? உம்முடைய முகமேன் இப்படி இருக்கிறது?

வ அதுவா? அதைக் கண்டா இவ்வாறு கூறுகிறாய்? நான் அங்கதேசத்தில் என் தாயாதிக்குக் காமக் கிரியை செய்ய வேண்டி வந்ததை மறந்தனையோ?

வா. ஆமாம்! அந்தப் போகக்கொன் றகப்பட்டதுபோலும், நிறுத்தும். இதோ கண்ணில் மை, குங்குமப்பொட்டு, செவ்வதரம், புருவச் சாந்து, இவைகளுக்கென்ன சொல்கிறீர்? யாரை மயக்க வந்தீர் இங்கு? உம்முடைய முகத்தைக் கண்ணாடியிற் பாரும், தெரியவரும் வெட்டவெளிச்சமாய்

வ. இதோ! கண்ணே, உன் கண்ணும் கண்ணாடியிற் பார்க்கிறேன்!

வா. உம், உம்! இம்மாதிரி கொஞ்சிப் பேசி வஞ்சியரை மயக்க எங்குதான் கற்றீரோ? இவ் வஞ்சகத்தினால்தான் நாங்களெல்லாம் ஏமாறுகிறோம். போனது போகட்டும், பிராணநாதா, இனியாவது ஜாக்கிரதையாயிரும். என் உத்தரவின்றி யாரையாவது மணந்தீரோ அடசணம என்னுயிர் விடுவேன் நான். பிராணநாதா, என்னை மணந்தபொழுது எனக்கு நீர் வாக்களித்ததையெல்லாம் மறவாதீர்!

வ. வாசவதத்தை, அப்படிச் செய்வேனோ நான? அதிருக்கட்டும், இத்தனை நாட்களாக ராஜ காரியங்களெல்லாம் சரியாய் நடந்து வருகின்றனவா?

வா. எனக்கென்ன தெரியும்? யௌகந்தராயணரை அழைத்துக் கேளும்.

வ. யார் அங்கே?

பாப்ரவ்யன் வருகிறான்.

பா. மஹாராஜா.

வ. மந்திரியை இங்கழைத்துவா. [பாப்ரவ்யன போகிறான்.] இப்படிப்பட்ட மந்திரி யொருவ னிருப்பதாலல்லவோ நான மன்னனாயிருந்தும் மனக் கவலை யற்று மகிழ்வுற்றிருக்கிறேன்

பாமரவ்யனை அழைத்துக்கொண்டு மறுபடியும் பாப்ரவ்யன் வருகிறான்.

வ. எங்கே மந்திரி? பாப்ரவ்யா, எங்கே மந்திரி?

பா. இதோ.

வா. இவனை யார் அழைத்து வரச சொன்னது?

பா. மஹாராஜா மந்திரியை அழைத்து வரச சொன்னாரே.

வ இநத மஹாராஜுபாவா எபபொழுது மந்திரி ஆனார்?

பா. தேவியவாகள இவனை மநதிரி யாக்கி மூன்று நாட்களாயின.

வ. ஓஹோ! வாசவததை, சரியான மந்திரியை ஏறபடுத்தினய்!

வசந்தகன் நகைததுககொணடு வருகிறான்.

வசந்தகா, எனன இநநேரம? எனன நகைததுக்கொண்டு வருகிறாய்?

வச இலலை, தாஙகள நகைததிரோ மன்றா நானும் நகைத்தேன்.—தேவி, நமஸகாரம் க்ஷேமந்தானே?

வா. ஐயோ பாவம! வசநதகா, நீயும உடனபட்டா யலலவா இச சூதுக்கு? தெரியு மெலலா மெனககு.

வச. அமமணி! என்ன சமாசாரம! நாஙகள் வெளியில் போயிருநத பொழுது ஏதாவது விசேஷ முண்டோ?

வா. ஒனறுந தெரியாது, பாவம!

வ. இதோ ஒரு விசேஷ மிருககிறது, வசந்தகா, டாமரவயனை மநதிரியாக ஏறபடுதநி யிருககிறாள தேவி!

பா ஆமாம.

வா என்ன பிராணநாதா! என்னை ஏளனம் செய்கிறீர்! இந்த மூடனை உமது வேடிககையினபொருட்டு அரண்மனைக்கு வரசசெயதேன.

வச. ஏன்? அமமணி, டமாரவாயண என்ன மூடனா? மிகுந்த புததிசாலி யாயிற்றே!

யௌகந்தராயணன் வருகிறான்.

யௌ. ஜெயவிஜயீபவ!

வ. மநதிரி, உம்மை நான் வரவழைத்தேன் சற்று முன். விசேஷ மேதாவது உண்டோ?

யௌ. மஹாராஜா! ஜெய சமாசாரமே! விஜய சமாசாரமே!

வ. என்ன? என்ன?

யௌ. அரசே, கோசலநாட்டை நோக்கிச சென்ற விஜயவர்மன் வெற்றி பெற்று மீண்டான்.

வ. மந்திரி, சந்தோஷம், வெற்றி பெற்று வரும் விஜயவர்மனுக்குத் தக்கபடி மரியாதை செய்வாய் நம்முடைய பட்டணமெங்கும் வெறறி விழா கொண்டாடும்படி பறையறைவிப்பாய்.—பாப்ரவயா நீ போய—

பா. இதோ அப்படியே! [வெளியே ஓடுகிருன்.]

வ. எங்கே ஓடுகிருன் நான் கட்டளை யிடுமுன்?

பாப்ரவ்யன் திரும்பி வருகிருன்.

பா. மஹாராஜா, எனக்குப பயமா யிருக்கிறது! வாயிலில் யாரோ ஒருவன்! பயமா யிருக்கிறது!

டா. நானு போயி பாத்து வாரேன் மஹாராஜா'—

[ஓடிப்போய் திரும்பி வந்து.]

ஆமாம!—ஆமாம்!—

வ. யாரது?

[ஓர் சேவகன் வந்து மந்திரியிடம் ஏதோ சொல்கிருன்.]

வச. அமமணி, நமது டமாரவாயர் மந்திரியா யிருபபதுடன் சேனுதிபதியாயு மிருந்தால நலமா யிருககும். இவருடைய வீரத்திற்கு—

யௌ. அரசே, உஜ்ஜயினி லிருநது யாரோ ஒரு இந்திரஜாலிகன் வந்திருக்கிருன், ராஜ சமுகத்தில் தன் திறத்தைக்காட்டக் காத்து நிற்கிருன்.

வா. உஜ்ஜயினி லிருந்தா? ஆனுல் பார்ப்போம்; வரச்சொல்லும், பிராணநாதா.

வ. அப்படியே,—வரச்சொல்லும்.

[மந்திரி ஒரு சேவகனை அனுப்புகிருன்.]

சமரசித்தி வருகிறான்.

ச. ராஜாதிராஜனே!—ராஜமகிஷி! நமஸ்காரம். நான் ஒரு இந்திரஜாலிகன், வானத்தில வரையையும், வையகத்தில வானத்தையும், நெருப்பில நீரையும், நீரில நெருப்பையும், அலலில் பகலையும், பகலில இரவையும், காட்ட வலலேன்! இவை யன்றி, உமக்கு யார யாரைப பார்க்க விருப்பமோ அவர்களை யெல்லாம வரவழைத்துக் காட்டுவேன்.

வ. எதோ பார்ப்போம, உன் திறத்தைக் காண்பி.

ச. [கரத்திலுள்ள பீலியைச சுழற்றி] இதோ பாருஙகள்! வானத்தில மும்மூர்த்திகளும தோனறுகினறனா! இநதிரன தோன்றுகிறான்! சநதிரன் தோனறுகிறான்! முப்பத்து முக்கோடி தேவாகளும தோனறுகிறார்கள்! பாருங்கள! பாருங்கள்!

எல்லோரும். என்ன ஆசசரியம்!

[வெளியில் ஜெய பேரிகை முழஙகுகிறது.]

யௌ. அரசே, விஜயவர்மன் வருகிறானபோ லிருககிறது தம்மைக் காண!

வ. ஆனால் உடனே தக்க மரியாதையுடன் அழைத்துவா.—

[மந்திரி போகிறான்.]

போதும நிறுத்து, இந்திரஜாலிகா, உன் திறத்தை மெச்சினோம்! பிறகு இன்னொரு சமயம மறறவைகளை யெல்லாம் பாரத்து மகிழ்கிறோம், இப்பொழுது விடை பெறறுக்கொள்.

ச. உத்தரவுபடி; மஹாராஜா. இனனும் சற்று நேரத்தில இதனிலும் மஹத்தான அறபுதம் காணபீர்.

[விடைபெற்றுச செலகிறான்.]

யௌகந்தராயணன் படைவீரா புடைசூழ விஜயவர்மனை அழைத்து வருகிறான் வசுபூதியும் வருகிறான.

வ. விஜயவர்மா! மெசசினோம உன திறம்!

வசு ஆ! யௌகந்தராயணரே! வாசவதததா தேவி உயிரோடிருக்கிறாகளே! இறந்ததாகச சொலலி யனுபபினீரே?—

யௌ. அப்புறம் எல்லாம் விளங்கச் சொல்கிறேன். இப்பொழுது மஹாராஜாவையும் தேவியையும் போய்க் காணும்.—அரசே, தம்மைப் பார்க்க சிங்களத் தீபத்து மந்திரி வந்திருக்கிறார்

வ. ஆ! வாரீர், வசுபூதி, உட்காரும். சிங்களத்தில் எல்லாம் க்ஷேமந்தானே?

வசு. ஆம், மஹாராஜா—முதலில், நான் கூறுமுன், தங்கள் சமுகத்திலிருக்கும் இந்த ரத்னஹாரம் ஏது என்று அடியேனுக்குக் கூறவேண்டும்

வ. வசுபூதி! இதை யேன் கேட்கிறீர?

வசு. மன்னிக்கவும்!—ஏதோ விசேஷம் நடந்திருக்கிறது! இன்னதென் றறிகிலேன்! சொல்லவோ என் நா எழ வில்லை.

வ. ஒன்றும் அஞ்சவேண்டாம், சொல்லும்.

வசு. கொஞ்ச நாட்களுக்கு முன்னர் இங்கிருந்து வந்த ராயபாரி எம் மரசரிடம் வாசவதத்தா தேவி தீயிற் பட்டு மாய்ந்ததாகக் கூறி, எம தரசருடைய புதல்வியாகிய ரத்னாவளியை உமக்கு மணம் புரியக் கேட்க, அதற் கவர் உடன்பட்டவராய் இதே மாதிரியான ஒரு சிறந்த ரத்னஹாரத்தைத் தன் புதல்விக்குக் கொடுத்து, தக்க பரிஜனங்களுடன் என்னையும் துணையாகச் சேர்த்து கடலின்மீது மரக்கல மொன்றில் அனுப்ப, கரையோரம் சேருங்கால் அது பெருங் காற்று மழையி லகப்பட்டுடைய, நான்மாத்திரம் மரத்துண் டொன்றைப்பற்றிக் கரையேறி, ராஜகுமாரியின் கதி என்ன வாயதோ என்று விசாரித்துக்கொண்டே இவவிடம் வந்தேன்.

வா. ஓஹோ! பிராணநாதா,—

வ. என்ன? வாசவதத்தை?—ஆ! அதென்ன கூச்சல்?

[உள்ளிருந்து கூக்குரல் "அரண்மனை யெங்கும் தீப்பற்றி யெரிகிறது! காப்பாற்றிக்கொள்ளுங்கள்! காப்பாற்றிக் கொள்ளுங்கள்" என் றுண்டாகிறது]

வா. ஆ! பிராணநாதா!

வ. கண்ணே! பயப்படாதே! நானிருக்கிறேன்.

வா. ஆ! பிராணநாதா! எனக்காக நான் பயப்படவில்லை! அந்தப் பேதை சாகரிகை சிறையிலடைப்பட்டிருக்கிறுள்! காப்பாற்றும்! காப்பாற்றும்! சாகரிகைதான் என் தங்கையாகிய ரத்னுவளி! சந்தேகமில்லை! சந்தேகமில்லை!

[சிறையின் சாவியை அரசனிடம் கொடுத்து]

விரைந்து போம்!

வசு. ஆ! [ஒன்றுந் தோன்றுது திகைத்து நிற்கிறுன்.]

[வத்சராஜன விரைந்தோடுகிறுன்.]

எல்லோரும். அரசே! ஜாக்கிரதை! ஜாக்கிரதை!

காட்சி முடிகிறது

---

## நான்காம் காட்சி.

இடம்—சிறைச்சாலை. காலம்—இரவு.

ரத்னுவளி கட்டப்பட்டு விழுந்து கிடக்கிறுள்.

ர. ஐயோ! இவ்விதி யனுபவிக்கத்தானோ இரண்டு முறை இறக்க விருந்தும உயிர் பிழைத்தேன்! நடுக்கடலில் மரக்கல முடைந்தபொழுதே நான் மடிந்திருக்க லாகாதா? அல்லது அன்றைத்தினமாவது சுருக்கிட்டு இறந்திருக்க லாகாதா?

[உள்ளிருந்து கூக்குரல் "அரண்மனை யெங்கும் தீப்பற்றி யெரிகிறது! காப்பாற்றிக்கொள்ளுங்கள்! காப்பாற்றிக் கொள்ளுங்கள்" என றுண்டாகிறது.]

ஆ! என்ன சப்தம்? என்ன ஒலி? அரண்மனை தீப்பற்றியதோ? ஐயோ! நான் என் செய்வேன்! பிராணநாதா! பிராணநாதா! நான் இப்படியும இறக்கவேண்டுமோ? பிராணநாதா! பிராணநாதா! எங்கிருக்கிறீர்! எங்கிருக்கிறீர்? காப்பாற்றும்! காப்பாற்றும்!

வத்சராஜன் விரைந்து வருகிறுன்.

வ. இதோ வந்தேன்! இதோ வந்தேன்! கண்ணே!

ர. ஆ! பிராணநாதா! பிராணநாதா!

[ரத்னுவளியைக் கட்டினின்றும் விடுவிக்கிறுன்.]

வ. ஆ! என்ன ஆச்சரியம்! ஒன்றையும் காணுமே!

ர. ஆ! பிராணநாதா! எங்கே மறைந்தது? சற்று முன்பாக தீ நான்கு புறம சூழ்ந்து நின்றதே! என்ன விந்தை!

வ. ஓ! இது இந்திர ஜாலக்காரன் வித்தையாயிருக்கவேண்டும்.

ர. என்ன ஆச்சரியம்! பிராணநாதா, சற்று முன்பாக நான் இறக்கப் போகிறேன என்று எண்ணி உமமைக காணு திறக்கிறோமே என்று வருந்தினேன்!—அம்மட்டும் சமயத்தில வநதீரே! இந்திரஜால மாயினுமாகுக, எதாயினுமாகுக, என்னை வந்து காணும்படி உம்மைச செய்ததே! நீர் கொஞ்ச காலம கழித்து வந்திருபபீராயின் நான் இறந்தே யிருபபேன்! தேவியவர்கள நேற்று போகுமபோழுது என்னைக கயிற்றால கட்டி விட்டுப போனாகள? தெரியுமா?

வ இதற்கே இவ்வளவு வருததபபட்டால, நீ என்றும் நீககக கூடாத பாசததால உன்னைக கட்டபபோகிறேனே சீககிரம, அதற்கென்ன செய்யப போகிறாய்?

ர ஏன, பிராணநாதா? நான் என்ன தபபு செய்தேன்?

வ சொலகிறேன் கேள்! ஒரு அறபப பிரஜையை வருததினாலே இவவாறு பெரும் தணடனை விதிககவேண்டும். மஹாராஜாவாகிய என்னையே நீ இவவாறு வருத்தியதற்கு உனக்குத தககு தண்டனை விதிக்க வேண்டாமா?

ர போம், பிராணநாதா! [நகைக்கிறாள்]

வ ஆஹா! இதறகுள் நகைத்துவிடாதே! உனக்குச் சககளத்தி அரண்மனையில ஒருத்தி வந்திருககிறாள். அவளைப் பார்த்த பிறகு நகைககலாம்.—வா போவோம்.

ர. அது யார், பிராணநாதா?

வ. நேரில வநது பார நீயே.

ர. நான் மாட்டேன்! யார் சொலலும் முன்பு.

வ. சொன்னால அவள் என்னை மணம்புரிய உத்திரவு கொடுக்கிறாயா?

ர. உம! ஏனோ? பாாக்கலாம்!

வ. சரி, இதற்குள் அவ்வளவு பொறுமையானால நான் சொல்லவில்லை.

ர. இதென்ன பிராணநாதா! அதெல்லாம் உதவாது, சொல்லும். இல்லாவிடின் இந்த சிறைசசாலையிலேயே என் உயிரை மாய்த்துக கொள்கிறேன்! என்னை யேன் காபபாற றினீர்?—

வ. சொலகிறேன் கோபியாதே!—

ர. அதெல்லாம உதவாது. முதலில அநதப பெண்ணை மணம புரிவதில்லை யென்று பிரமாணம செய்யும

வ. வேணடாம், வேண்டாம! பிறகு நீயே வருததப்படுவாய்! நீயே அபபெணணை மணம புரியும்படி கொஞ்சப போகிறாய்! இபபொழுதே சொனனேன!

ர. ஒருகாலுமில்லை! என னுயிா போனாலும் உடன் படேன!

வ. வாஸ்தவம தானே?

ர. வாஸ்தவம் தான.

வ அநதப பெண சிஙகள தேசத்து மனனன விககிரமபாஹு வின குமாரததி, ரதனாவளி—

ர. பிராணநாதா! எலலாம் அறிநதுவிடடீரா?

வ. அறிநதும் பயனென்ன! நீதான் சொலலிவிடடாயே நான் அப பெண்ணை மணககலாகாதென்று!

ர. உம! இலலை! இலலை! மணமபுரியும! மணம்புரியும!

வ. உம! அபபொழுதே சொன்னேனே கேடடீரையா?

ர. இதிருககட்டும், தேவிககும தெரியுமோ?

வ. தேவிதான் இஙகென்னை அனுபபினாள் உனனைக் காப்பாறற, வா போவோம் சீககிரம. [போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## ஐந்தாம் காட்சி.

இடம்—அரண்மனை அந்தப் புறம். காலம்—இரவு.

வாசவதத்தை ஆசனத்தில் வீற்றிருக்க யௌகந்தராயணன், வசுபூதி, வசந்தகன், பாப்ரவ்யன், டாமரவ்யன், விஜயவர்மன், முசலானோர் நின்றுகொண்டிருக்கின்றனர்.

வா. மந்திரி, சாகரிகைதான் ரத்னவளி யென்பதற்குச சந்தேக மில்லை! எனக்கு முன்பே சந்தேகமா யிருந்தது! ஆயினும் இத்தனை காலம் உண்மை யறியாது என் சொந்த தங்கை யைக் கஷ்டபபடுததினேனேயென்று வருத்தமா யிருக்கிறது.

யௌ. தேவி, நடந்துவிட்ட காரியததைக் குறித்துத தாம் கவலைப் பட வேண்டியதில்லை. எல்லாம் தெய்வ கடாட்சம்.

ரத்னவளியை அழைததுக்கொண்டு வத்சராஜன் வருகிறான்.

வ. வாசவதத்தை, இதோ கொண்டுவந்தேன் சாகரிகையை உன உததிரவினபடி. என்ன ஆசசரியம! அநத இந்திர ஜாலககாரன் சாஹசமே இவ வரணமனை யெங்கும் தீபபற றியதுபோல தோனறியது!

வா. ஆமாம, அது உமக்கனுகூலமாகததான் வாய்ததாறபோலி ருககிறது!

வசு. சநதேக மிலலை,—அம்மா, ரத்னவளி! தெய்வகடாட்சத் தால தம்மை உயிருடன் காணபபெறறேனே!

வா. சாகரிகா—ரதனவளி—வா, ஏன் அஞ்சி நிறகிறாய்? வா என்னிடம! இததனை நாளாக உன்னை என் சொநத தஙகை யென் றறியாமறபோனேன்! எனனை மன்னிப்பாய்.— கண்ணே, ஏன் உண்மையை என்னிடம் அபபொழுதே சொல்லவில்லை?

ர. அம்மா, எனக்கு ஏதோ—பயமா யிருந்தது.

வா. பயமென்ன? போனது போகட்டும் அவைகளை யெல்லாம் மறந்துவிடு.

ர. அப்படியே, அம்மா.

வா　ரத்னாவளி, இனி என்னை அம்மா என்றேன் அழைக்கிறாய், அக்காள் என்றழை

வச.　உம்! சும்மாவாக அக்கா ளென்றழைத்துவிடுவ தெப்படி? அதற்கு நடக்கவேண்டியது நடந்தாற்றானே கூப்பிடலாம்!

வா　அதற்காகத்தானே இத்தனை நாளாகக் கஷ்டப்பட்டாய் நீ?

வச.　கஷ்ட மொன்று மில்லை அம்மணி. கனவுகாண்கிறது ஒரு கஷ்டமா?

வா.　அக் கனவை கைவிடாதே நீ.

வச.　கனவு நினைவாகிறவரையில விடுவேனு நான்?

வா.　சாகரிகா, மஹாராஜாவை மணம் புரிகிறாயா? ஓ! அப்படி கேட்க லாகாது!—ஐயா! இந்த வயிதந்திப் பெண்ணை விவாகஞ் செய்து கொள்கிறீரா?

[ரதனாவளியை அரசனிடம் ஒப்புவிதது]

மஹாராஜா, ஏன் தலை குனிந்துகொளகிறீர்? மனபூர்வமாக தானமாகக கொடுததால் பெறறுக்கொள்ள எனன தடை? பெற்றுக்கொள்ளும்.—ஆரயரே, அன்னை பிதாவை விட்டுப் பிரிந்து வநதிருக்கும இவ வறியாபபேதை மன வருத்தமொன்றும் உணராதபடி ஆதரியும்!

வ.　உன் உத்தரவுபடி.

வச.　கனவு நினைவாயது!—மஹாராஜா, எனக் கொன்று மில்லையா?

வா.　எங்கே உன் சுசங்கதை?

வச.　அவளைத்தான் தேடுகிறேன்; சுசங்கதையைக் காணேமே.

பா.　நான் இருககிறேனே.

வச.　புத்திசாலி!

வா.　பிராணநாதா, எனனையும் மறவாதீர?

வ.　வாசவதத்தை! என்ன அபபடி கூறுகிறாய்! உன்னை மறப்பேனே?

வச.　மஹாராஜாவுக்கு ஒன்றுக்கு இரணடாயது!—எனையா பப்ரவாயரே! நான என்ன செய்வது?

பா. என் தம்பி டாமரய்யன் இருக்கிறான.

வச உம்!—அவன் தம்பி இன்னும் யாரு மில்லையா?

பா. இருக்கிறாகளே, நாலு பெயர்—

வச. அதுயாரா அது?

பா. லாமர்— [எல்லோரும் நகைக்கிறார்கள்.]

டா எலலாஞ் சிரிக்கராங்களே! சரியா சொலலு அண்ணாத்தே! மாமர்!— [எல்லோரும் நகைக்கிறார்கள்.]

வ. போதும் நிறுத்துங்கள்!

யௌ. மஹாராஜா, இன்றே என் கோரிக்கை முற்றியது! இத்தனை காலமாக தாம் அறியாது எபபடியாவது இலங்கை மன்னன் புதலவியைத் தாம மணக்க வேண்டுமென்று முயன்றுவந்த தறகாக மன்னிக்க வேண்டும!

வசு. என் னெண்ணமும் நிறைவேறியது!

வச என் கனவும் நிறைவேறியது!

வா. ரத்னாவளி எண்ணமும் நிறைவேறியது!

பா. எனககு நாலு பெயரும் வந்து விட்டது!

டா. எனக்குஙகூட!

ர. [ஒரு புறம் வதசராஜனிடம] பிராணநாதா, என்னெண்ணமும் நிறைவேறியது!

வ. [ஒரு புறம் ரதனாவளியிடம] என தெண்ணமும் கைகூடியது.

காட்சி முடிகிறது.



